*Kumaraṉ*

*Āram 14, muttu 18*

*December 17, 1936*

Record no. 313

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113,

REG. M. NO. 1823. 20 பக்கங்கள். KUMARAN WEEKLY.

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5—0—0
ஆறு மாதம் 3—0—0
ஸிலோன், பர்மா வருஷம் ஒன்றுக்கு ரூ. 6—0—0
மலாய் முதலிய வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 7—0—0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்திற்கு மானேஜருக்கு எழுதவும்.

(மாதப்பதிப்பும் சேர்ந்தது.)

வியாழன் தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY.

ஆசிரியர்:— சொ. முருகப்பா.

ஆரம் 14. காரைக்குடி, தாது-ஸ்ரீ மார்கழிமீ 3உ (17—12—36.) முத்து 18.

# விதவையை மணந்த பிரிட்டிஷ் வேந்தன்

## அரசியான அந்தப்புரமாது

## 16-வது நூற்றுண்டின் காதல் கதை

ஸ்ரீமதி சிம்ஸன் என்னும் அமெரிக்க அழகிமீது கொண்ட காதலால் எட்டாவது எட்வர்டு மன்னர், பரந்த ஏகாதிபத்தியத்தின் சக்ரவர்த்தி என்ற தமது பட்டத்தையும் பதவியையும் துறந்துவிட்டார். காதலுக்காக தமது அந்தஸ்தைத் தியாகம் செய்த இவரது செயல் உலகினரால் போற்றப்படினும், அறிவு சான்ற அவரை அரசராக வைத்துக்கொள்ள முடியவில்லையே என்று பிரஜைகள் வருந்துவார்களென்பது உண்மை. சாதாரண ஒரு மாதின் பிணைப்பு அவரது சகலவிதமான ஆடம்பரங்களையும் பட்டங்களையும் பதவிகளையும் துறக்கச்செய்துவிட்டது. இந்த உலகில் பிரிட்டிஷ் அரசருக்கு மேலான பதவியோ பட்டமோ கிடையாது என்பது உலகறிந்த விஷயம். அந்தப் பெரிய பதவியையும் பட்டத்தையும் ஒருவர் காதலின் பொட்டு துறக்கவேண்டுமானல் அக் காதலின் பெருமை எத்தன்மையதாக இருக்கவேண்டுமென்று யாரால்தான் நிர்ணயிக்கமுடியும். சுருங்கச் சொல்லின் இந்த நூற்றுண்டிலேயே இக் காதல் நாடகம் உன்னதமானது என்றுதான் கூறவேண்டும்.

பிரிட்டிஷ் அரச குடும்பத்தில் இதற்குமுன் இத்தகைய காதல் நாடகம் ஏதேனும் நடந்திருக்கிறதா என்பதை ஆராய்வது இச் சமயம் பொருந்தும். அதற்கான ஆதாரங்கள் பல இருக்கின்றன. எட்டாவது ஹென்றி அரசரின் வாழ்க்கை இப்போது நினைவுகூர்ந்துகொள்வற்கு ஏற்றதாகும். சற்று உங்கள் கவனத்தை 16-வது நூற்றுண்டுக்குத்திருப்புங்கள். 16-வது நூற்றுண்டில் இங்கிலாந்தை 8-வது ஹென்றி ஆட்சி செய்து வந்தார். தமது 18-வது வயதில் அவர் சிம்மாசனம் ஏறினர். அப்போது அவர் எடுத்த காரியத்தை முடிக்காம விருப்பதில்லை. சிம்மாசனமேறும் போது அவர் நமது எட்டாவது எட்வர்ட் மன்னர் பிரானைப்போல் விவாகமாகாமலே இருந்தார். சிம்மாசனமேறிய சில மாதங்கள் கழித்து ஹென்றி மன்னர் தமது மூத்த சகோதரர் ஆர்தரின் விதவையாகிய காதரைன் அரசியை மணந்துகொண்டார். முதல் இரண்டு வருடங்களில் அவர் அரசியலில் கவனம் செலுத்தவில்லை. பின்னர் சேர்ந்தாற் போன்று மூன்று வருடங்கள் பிரான்ஸோடு போர் புரிந்தார். போர்க்களத்திலிருந்து திரும்பியதும் அவரிடம் விசேஷ மாறுதல்கள் காணப்பட்டன. இங்கிலாந்தின் செல்வாக்கை அபிவிருத்தி செய்ய அவர் ஊக்கமாக உழைத்தார். சகல விஷயங்களிலும் பார்லிமெண்டுடன் ஒத்துழைத்தார். பிரிட்டிஷ் தீவுகளை இணைப்பதற்கும் அவர் பல ஏற்பாடுகளை ரகசியமாகச் செய்து வந்தார்.

தம்முடைய ராஜ்ய பாரப் பொறுப்பை ஒப்படைப்பதற்குத் தமக்குப் புதல்வர்கள் பிறக்காதது குறித்து வருந்தினர். காதரைன் அரசி அவருக்கு ஒரு ஆண் குழந்தையைக் கூடப் பெற்றுக்கொடுக்கவில்லை. அது அவருடைய துரதிர்ஷ்டமென்றே கூறவேண்டும். இதனல் அவர் காதரைன் அரசியைத் தூதள்ளிவைக்கத் தீர்மானித்துவிட்டார்.

ஹென்றி மன்னரின் அரண்மனையின் அந்தப்புரத்தில் நூற்றுக்கணக்கான அழகான இளம் பெண்கள் இருந்தனர். அவர்களில் அனிபெலின் என்ற யுவதி இணையற்ற அழகுடையவளாக இருந்தாள். அவள் சரித்திரப் பெருமையடைவாளென்று யாரும் எதிர்பார்க்கவில்லை. அவள் மீது ஹென்றி மன்னர் தமது காதல் வலையை வீசினர். அனிபொலின் மன்னர் தன்மீது திடீரென கருணைகாட்டத் தொடங்கியதைக் கண்டு ஆச்சரியமடைந்தாள். ஓர் சாதாரணப் பெண்ணை—அந்தப்புரப் பணிப் பெண்ணை—அனிபொலினை ஹென்றி மன்னர் காதலிக்கத் தொடங்கிய கதை காட்டுத்தீ போல் தேசம் முழுவதிலும் பரவி விட்டது. அப்போது தமது கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அனிபொலினை ஹென்றி மன்னர் அரண்மனையிலிருந்து வெளியேற்ற வேண்டியதாயிற்று. தமது அருமைக் காதலியைப் பிரிய நேரிட்டது குறித்து அவர் மிகமிக வருந்தினர். எனினும் அவர் அனிபொலினுக்கு அடிக்கடி காதற் கடிதங்கள் அனுப்பிக்கொண்டே இருந்தார். அவர் அவளை அரண்மனையை விட்டு வெளியேற்றியதற்காக ஒரு கடிதத்தில் அவளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருந்தார். மற்றொரு கடிதத்தில் அவர் காதல் வியாதிக்குச் சிறந்த மருந்து என்னவென்று கேட்டிருந்தார். 1528ம் வருடம் ஆகஸ்டு மாதத்தில் எழுதிய அவரது காதல் கடிதம் 4-வதாகும். அக்கடிதத்தில் அனிபொலினைப் பட்டமகிஷியாக ஆக்குவதாகவும் அவளுடன் போட்டிபோடும் பெண்களை உதைத்துத் தள்ளிவிட்டு அவளுக்கு கிரீடத்தைச் சூட்டுவதாகவும் அவளது அபிப்பிராய மென்ன என்றும் கேட்டிருந்தார்.

வேறொரு கடிதத்தில், அவர் வரைந்திருந்தது வருமாறு:— "காதலி! நீ என்னுடைய ராணியாவதை எவராலும் தடைசெய்ய முடியாது. காதரைன் அரசியுடன் விவாகரத்து செய்து கொள்வது எவ்வளவுதூரம் நியாயமாகுமென்பதைப் பரிசீலனை செய்யும் பொருட்டு சில நிபுணர்கள் நியமனம் செய்யப்பட்டிருக்கின்றனர். அவர்களின் அபிப்பிராயத்தை அறிந்துகொள்ளும் வரை நாம் ஒருவரை ஒருவர் சந்திக்க முடியாது.

இக்கடிதங்கள் வரைந்து சில மாதங்கள் கடந்தன. காதரைன் அரசியுடன் தாராளமாக விவாக ரத்துச் செய்துகொள்ளலா மென்று ஐரோப்பிய சர்வகலாசாலைகள் ஏகோபித்த அபிப்பிராயம் தெரிவித்துவிட்டன. 1533-ம் வருடம் ஜனவரி மாதம் 25உ யன்று ஹென்றி மன்னர் தமது காதலியாகிய அனிபொலினை மணந்துகொண்டார்.

அனிபொலின் மணவாழ்க்கை அதிக நாள் நீடிக்கவில்லை. அவள் ஹென்றி மன்னனை மணக்காமலிருந்திருந்தால் தன்னுடைய உயிரைப் பலிகொடுத்திரா

(12-ம் பக்கம் பார்க்க)

## திருவாங்கூர் நாஷனல் பாங்கு லிமிடெட்.

(1912-ம் ஸ்ரீ திருவாங்கூரில் இணைக்கப்பட்டது)

தலைமை ஆபீஸ்:—ஆலப்பிழை. கிளை ஆபீஸ்:—காரைக்குடி.

(1) கரண்ட் அக்கவுண்ட், சேவிங்ஸ் பாங்க், தவணை டிபாசிட்டுகள் பின் கண்ட வட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

| | | | | |
|---|---|---|---|---|
| கரண்டு அக்கவுண்டு ரூ. 100-க்கு வருஷத்திற்கு | | | ரூ. | 1 |
| சேவிங்ஸ் பாங்கு ரூ. 100-க்கு | | „ | ரூ. | 3 |
| 3 மாத சாஸ்வத டிபாசிட்டு „ | | „ | ரூ. | 2½ |
| 6 „ | „ | „ | „ ரூ. | 3 |
| 12 „ | „ | „ | „ ரூ. | 4 |
| 24 „ | „ | „ | „ ரூ. | 4½ |

சேவிங்ஸ் பாங்க் கணக்கில் வாரத்தில் 250 ரூபாய் வரை செக்கு வெட்டி எடுத்துக்கொள்ளலாம். தினசரியும் செக்குகள் வெட்டலாம்.

(2) எல்லா ஊர்களின் பேரிலும் மிகக் குறைந்த கமிஷனுக்கு உண்டியல்கள் கொடுக்கப்படுவதோடு அவ்வூர்களின் உண்டியல்களை செக்குகள் டிஸ்கவுண்டு செய்யவும் படுகிறது. இன்கம்டாக்ஸ் வவுச்சர்களுக்கு காஷ் கொடுக்கப்படுகிறதோடு, வரி கட்டுவதும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

(3) தென்னிந்தியாவிலுள்ள ஏறக்குறைய எல்லா இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி பிரீமியங்களையும் இங்கேயே கட்டிக்கொள்ள ஏற்பாடு உண்டு.

(4) தங்க நகை ஈட்டின் பேரிலும் வியாபார சரக்குகளின் பேரிலும், தகுந்த புள்ளிகளுக்கு நபர் ஜாமீன்பேரிலும், கம்பெனி ஷேர்கள், கவர்மெண்ட் பாண்டுகள் முதலியவைகள் பேரிலும் கடன் கொடுக்கப்படும். இன்னும் மற்றெவ்வித பாங்கிங் வேலைகளுமுண்டு.

வேண்டிய விபரங்களை ஆபீசிலிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

For the Travancore National Bank Ltd.,
K. C. Mathew, B. A.,
Agent. (Karaikudi.)

சு. நா. கட்டிடம்,
காரைக்குடி.

Best copy available.

## பள்ளிக்கூடங்களில் மகாத்மா படம்

### கார்ப்பரேஷன் ஊழியர்களுக்குக் கதர் உடை

டிஸம்பர் 9உ நடந்த சென்னைக் கார்ப்பரேஷன் கூட்டத்தில் பின்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

கார்ப்பரேஷன் பள்ளிக்கூடங்களிலெல்லாம் மகாத்மா காந்தியின் படத்தை நல்ல எடுப்பான இடத்தில் மாட்டி வைக்க வேண்டுமென இந்தசபை தீர்மானிக்கிறது.

இத்தீர்மானத்தைக் குறித்துக் கமிஷனர் பேசுகையில் மகாத்மாவின் படச் செலவை சர்க்கார் சரியான செலவாக ஒப்புக்கொள்ள மாட்டார்களென்றும் இதுபற்றி ஒரு கவர்ன்மெண்டு உத்திரவு மிருக்கிறதென்றும் ஆகையால் இத்தீர்மானத்துக்குச் சர்க்கார் அனுமதிபெற வேண்டுமென்றும் தெரிவித்தார். முஸ்லிம்கள் இருவரும் ஷை தீர்மானத்தை எதிர்த்தனர்; கடைசியில் தீர்மானம் மெஜாரிட்டி ஓட்டுகளில் நிறைவேறியது.

#### கதர் உடை

"கார்ப்பரேஷன் ஊழியர்கள் உபயோகத்துக்காக கார்ப்பரேஷனுல் வாங்கப்படும் துணிகளெல்லாம் கையால் நூற்கப்பட்டு கையால் நெய்யப்பட்ட சுத்தக் கதராகவே இருக்க வேண்டும்" என்ற தீர்மானம் திரு- லட்சுமணசாமியவர்களால் பிரேரேபிக்கப் பெற்றது. பாசுதேவ் மில்களைத் தான் ஆதரிக்க வேண்டுமென்று கூறி எதிர்த்தார். ஓட்டுக்கு விடப்பட்டதில் சாதமாக 33 பேரும் பாதகமாக 10 பேரும் வாக்களித்தனர். தீர்மானம் நிறைவேறியது.

---

### ஜில்லா பொருளாதாரக் கவுன்ஸில்கள்

கவர்ன்மெண்டால் அமைக்கப் பட்டுள்ள ஜில்லாப் பொருளாதாரக் கவுன்ஸில்களின் தொகை இரண்டாக இருப்பதை 4ஆக உயர்த்த கவர்ன்மெண்டார் தீர்மானித்திருக்கிறார்கள்.




விரைவில் குணப்படுத்தும்.

சோவைப்பிடித்தவர்களுக்கு சிறந்த ஔஷதம்.

இரத்தமில்லாது பல வியாதியால் கஷ்டப்படுபவர்களுக்கும் சோவைப் பிடித்தவர்களுக்கும் ஹெபிலெக்ஸ் ஒரு சிறந்த ஔஷதம்.

ஹெபிலெக்ஸ் புதிய கல்லீரல் சத்தைக் கொண்டும் இரத்த விருத்திக்கு தேவையான சத்துப் பொருட்களைக்கொண்டும் தயாரிக்கப்பட்ட சிறந்த டானிக். வியாதியை சீக்கிரத்தில் குணப்படுத்தி, பசியை உண்டாக்கி, அதிக இடையையும், பலத்தையும் ஏற்படுத்துகிறது.

இரத்தமில்லாது வருந்துபவர்களுக்கு அனேக திறமையுள்ள டாக்டர்கள் 'ஹெபிலெக்ஸை' சிபார்சு செய்கிறார்கள்.

இன்றே ஹெபிலெக்ஸை சாப்பிட்டு நல்ல இரத்தம் உண்டாவதைப் பாருங்கள்.

சிறிய பாட்டில் விலை ரூ 3—0—0
பெரிய ,, ரூ 5—8—0

தபால் சார்ஜ் பிரத்தியேகம்.
ஏஜன்ஸி இல்லாத ஊர்களுக்கு ஏஜண்டுகள் தேவை.

# பெரியகோட்டையில் அம்பலகாரர்கள் கைதியாயினர்

## ஜாமீனில் விடுதலை

(நமது நிருபர்)

காரைக்குடி, டிச. 9—

இராமநாதபுரம் ஜில்லாபோர்டு தேர்தலில் பள்ளத்தூர் சர்க்கிளைச் சேர்ந்த மித்ராவயல், பெரியகோட்டை இக்கிராமங்களில் காங்கிரஸ் அபேக்ஷகர் ஸ்ரீமான் நாகப்ப செட்டியாருக்கு ஏஜண்டுகளாக வேலை செய்துவந்த புக்குடி செல்லையா அம்பலம், ஆம்பக்குடி ராக்கப்பன் அம்பலம், ஆவுத்தான் சுப்பையா அம்பலம், தொப்பையன் அம்பலம், சிறுகப்பட்டி உடையப்பன் அம்பலம், பெரியகோட்டை கருப்பன் அம்பலம், செல்லியான் அம்பலம், புலியன் உடையான் அம்பலம் ஆகிய எண்மர் பழைய தேர்தலில் எதிர்கக்ஷி ஸ்ரீமான் வெங்கிடாசலம் செட்டியாருக்கு வோட்டுக் கொடுத்ததற்காக சில கிராமவாசிகளைத் துன்புறுத்தியும் அபாதம் விதித்தும் அச்சுறுத்தியதாக இ. பி. கோ 107-வது பிரிவுப்படி 8உமாலை பெரியகோட்டையில் விசேட ரிசர்வ் போலீஸுடன் சிவகங்கை உதவி ரூப்பிரண்டு ஸ்ரீமான் ராஜரத்தின முதலியாரவர்களால் கைது செய்யப்பட்டு திருப்பத்தூர் சப் ஜெயிலில் ரிமாண்டில் வைக்கப்பட்டனர்.

இதன் மத்தியில் கைது செய்யப்பட்டவர்களை ஜாமீனில் விடும்படி வக்கீல் ஸ்ரீமான் M. R. கிருஷ்ணசாமி அய்யங்காரும், பாரிஸ்டர் ஜியார்ஜ் ஜோசப் அவர்களும் அன்றிரவு கானாடுகாத்தானில் முகாம் போட்டிருந்த சப்கலெக்டரவர்களிடம் மனுச்செய்துகொண்ட பொழுது, கைதிகள் தம்மிடம் ஆஜர்படுத்தப்பட்ட பிறகுதான் கவனிக்கப்படுமென்று கூறவே, மறுநாள் காலை ஜாமீன் மனு தாக்கல் செய்யப்பட்டு விசாரணை 10-12-36உ பள்ளத்தூர் முகாமில் நடைபெற்றது.

போலீஸ் பிராசிகூஷன் தரப்பில் எதிரிகள், காங்கிரஸ் காரரல்லாத அபேக்ஷகருக்கு வோட்டுப் போட்டவர்களைப் பயமுறுத்தியும், ஜாதியை விட்டு தள்ளிவைத்தும், அபாதம் விதித்தும் வந்திருப்பதாகவும் எதிரிகளின் செய்கையைப்பற்றி பயம் கொண்டு சில கிராமவாசிகள் பந்தோபஸ்து அளிக்கும் படியும் அவர்களின் பயத்தை அகற்ற பரிகாரம் தேடும்படியும் மனுச் செய்து கொண்டிருக்கிறார்களென்றும் மனுவில் கண்டவைகள் உண்மையென விசாரணையில் தெரிந்தவுடன் போலீசார் எதிரிகளைக் கைது செய்திருக்கின்றனரென்றும் எதிரிகளை ஜாமீனில் விடுவது பொதுஜன சாவதானத்திற்கு பங்கமேற்பட்டு கலகம், கொள்ளை முதலிய குற்றங்கள் ஏற்படுமென்றும், தவிர எதிரிகளுக்கு ஜாமீன் கொடுத்தவர்களின் பெருமதி சந்தேகிக்கப்படத்தக்கதாயிருக்கிறதென்றும், ஜாமீன் பெருமதி அத்தாக்ஷி வேற்று மனுஷ்யனுல் எழுதப்பட்டு வில்லேஜ் முன்சீபால் கையெழுத்து மாத்திரம் போடப்பட்டிருப்பதால் மேற்படி அத்தாக்ஷிகள் நம்பத்தக்கதல்லவென்றும் வாதிக்கப்பட்டது.

எதிரிதரப்பில் ஆஜரான வக்கீல் ஸ்ரீமான் M. R. கிருஷ்ணசாமி அய்யங்கார்., எதிரிகள் காங்கிரஸ் அபேக்ஷகருக்கு தீவிரமாக வேலை செய்துவருவதைக் கொண்டு இந்த அரஸ்டு எதிர்க்கக்ஷியினரின் சூழ்ச்சியின் காரணமாக ஏற்பட்டதென்றும், எதிரிகள் நல்ல சொத்துள்ள நாணயமான, கண்ணியமிகுந்த நாட்டாமைக் காரர்களென்றும் இத்தேர்தலில் காங்கிரஸ் அபேக்ஷகருக்கு உதவி செய்ய பெரியகோட்டை கிராமத்தில் வேறு ஒருவரும் கிடையாதென்றும் ஆகையால் நபர் 1-க்கு ஜாமீன்பத்திரம் ரூ. 500-ம், தனித்தனி இரண்டு ரொக்க ஜாமீன்கள் ரூ 500/— வீதமும் கொடுக்கத் தயார் என்றும் எதிரிகளை ஜாமீனில் விடுதலை செய்ய வேண்டுமென்றும் சாதாரணமாக 107-வது பிரிவுப்படிக்குள்ள கைதிகள் ஜாமீனில் விடப்படுவது சகஜமாயிருக்க இந்தக் கேஸில் மாத்திரம் கோர்ட்டார் எதிரிகளை ஜாமீனில் விட மறுத்தால், சர்க்கார், தேர்தலில் ஜஸ்டிஸ் கட்சியை மாத்திரம் ஆதரிக்கிறாரென்று பொது மக்களிடை அவதூறு கிளம்புமென்றும், அவ் அவதூறைப் போக்கிக் கொள்வதாகவிருந்தால் கோர்ட்டார் இவ்வெதிரிகளை உடனே ஜாமீனில் விடவேண்டுமென்றும் எதிர்வழக்காடினர்.

கனம் ஜாயிண்டு மாஜிஸ்திரேட் ராவ் பகதூர் ஜி. சுப்பா ரெட்டி அவர்கள், ஜாமீன் பெருமதி அத்தாக்ஷிகள் வேறொருவரால் எழுதப்பட்டு கிராம முனிசீபுகளால் கையெழுத்துப் போடப்பட்டிருப்பதைக் கொண்டு ஷை பெருமதிகள் சரியில்லையென போலீசார் ஆக்ஷேபிப்பதால் ஷை பெருமதியைப் பற்றி விசாரணை செய்ய மறுநாள் 11 தேதிக்கு வாயிதாப் போட்டனர்.

இதன் மத்தியில் மதுரையிலிருக்கும் இராமனுதபுரம் ஜில்லா மாஜிஸ்திரேட்டிடமிருந்து எதிரிகள் தரப்பில் விடப்பட்ட ஜாமீனை அங்கீகரித்து எதிரிகளை விடுதலை செய்யும்படி தகவல் வந்ததாக கூறப்படுகிறது. கனம் ஜாயிண்டு மாஜிஸ்திரேட் அவர்கள் 11உ மாலை 5-மணிக்கு அரஸ்டு செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ள எதிரிகள் எல்லாரையும் ஜாமீனில் விடுதலை செய்தனர்.

11உ மாலை 5 எதிரிகளும், பாக்கி எதிரிகளுக்குப் பணம் கட்ட நேரமாகி விட்டதால் 12உ காலையில் மீதி மூன்று எதிரிகளும் விடுதலை செய்யப்பட்டனர். ஜாமீனில் விடுதலை செய்யப்பட்ட காங்கிரஸ்காரர்கள் மாலைகளணிவிக்கப்பட்டு ஊர்வலமாக திருப்பத்தூர், காரைக்குடி முதலியவிடங்களில் அழைத்துச் செல்லப்பட்டு பள்ளத்தூர் காங்கிரஸ் கமிட்டி ஆபீசுக்கு அழைத்துச் செல்லப் பட்டனர்.



அகில பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் மகாநாட்டுத் தலைவர் திரு. ராம. அரு. அரு. ராம. சோக்கலிங்கஞ் செட்டியாரவர்கள்.

---

### சமபந்தி போஜனம்
### 400 ஜாதி ஹிந்துக்களும் ஹரிஜனங்களும் கலந்து கோண்டனர்

நாகபுரி டிச 5.

நேற்று இங்குநடந்த சமபந்தி விருந்தில் 400 ஜாதி ஹிந்துக்களும் 400 ஹரிஜனங்களும் கலந்துகொண்டனர். மாஹர்களும் தோட்டிகளும் உயர்தர வகுப்பு பிராமணர்களுக்குப் பரிமாறினர். பிராமணர்களும், மாஹர்கள் தோட்டிகள் முதலியவர்களுடன் விருந்தில் கலந்து கொண்டனர். சுமார் 151 உயர்வகுப்பு பிராம்மண ஸ்ரீகளும் இதில் கலந்து கொண்டனர். பிரபல சமஸ்கிருத வித்வாஞகிய திரு. கே. எம். தாப்தாரைத் தலைமையாகக் கொண்ட சமபோஜனக் கமிட்டி விருந்தை நடத்தியது.



## மதிப்புரை.

### மிஸஸ் ஜெயராமன்

[ஒரு சமூகக் கதை. ஆசிரியர் கோட்டையூர் ராம. ராமனுதன். பக்கம் 74. கிடைக்குமிடம் ஷண்முகானந்த சங்கம், அய்மென். (பர்மா) விலை அணு 5]

ஒரு அழகிய சமூகசீர்திருத்தக் கதை. கோகிலம் ஜெயராமனை நேசித்தல், ஜெயராமனும் கோகிலத்தை நேசித்தல்; கோகிலத்தின் தந்தை நல்ல நிலையிலிருக்கும் காலத்தில் ஜெயராமனுக்கே கோகிலத்தை மணமுடிப்பதென்று நிச்சயித்தல்; காலப்போக்கில் அது மாறி விடுதல்; அழகப்பனுக்கு இரண்டாந்தாரமாகக் கோகிலம் நிச்சயிக்கப்படுதல்; விதவைப்பெண்ணை ஞானம் அழகப்பனுல் கற்பழிக்கப்படுதல் ஆகிய இந்த அம்சங்களை வைத்துக்கொண்டு ஆசிரியர் கதையை அழகாகச் சித்தரித்திருக்கிறார். கதையின் போக்கு நன்ருக இருக்கிறது. கதா நாயகர்களை நன்கு பெருமைப்படுத்தியிருக்கிறார். வைதவ்யத்தினுல் சாதாரணமாக ஏற்படுகின்ற பரிதாப சம்பவங்களையும் கதையில் ஆசிரியர் புகுத்தியிருப்பது கவனிக்கத்தக்கது. சீர்திருத்தம் எப்பொழுதுமே வெற்றி பெறும் என்ற உணர்ச்சியை இவ்வழகிய கதா ரூபமாக ஆசிரியர் நமது உள்ளத்தில் பதிய வைக்கிறார். நடை நன்ருக இருக்கிறது. இந்நூல் ஆண் பெண் இருபாலாரும் நன்கு பயிலத்தக்கது.

### அறிவுக் கொடி

[மாதப் பத்திரிகை. ஆசிரியர் ஸ்ரீமதி. S. C. சிவகாமு சிதம்பரனர். வருஷசந்தா ரூ. 1-0-0. தனிப்பிரதி 0-1-6. "மானேஜர், அறிவுக்கொடி, கும்பகோணம்" என்ற விலாசத்திற்கு எழுதிச் சந்தாதாராகலாம்.]

ஸ்ரீமதி சிவகாமு சிதம்பரனர் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் "அறிவுக் கொடி"யின் முதல் மலர் கிடைக்கப் பெற்றோம். வெற்றிப் பாட்டுடன் 'கொடி' புறப்படுகிறது. "நமது முதல் நோக்கம் சமூக சீர்திருத்தம்" என்று ஆசிரியர் குறிப்பிட்டு விட்டுப் பத்திரிகையின் கொள்கைகளை அழகாக விளக்குகிறார். சமூக சீர்திருத்த உணர்ச்சியும், வேலையும் ஆக்கம் பெற்று வளர வேண்டிய தமிழ் நாட்டுக்கு 'அறிவுக் கொடி' போன்ற உரமான அபிப்பிராயமுடைய பத்திரிகையின் சேவை பெரிதும் வேண்டற்பாலதென்பதில் ஐயமில்லை.

நல்ல கட்டுரைகள், கதைகள், பாக்கள் முதலிய நறுமலர்கள் அறிவுக்கொடியில் அலர்ந்து நன்மணஞ் செய்கின்றன.

அறிவுக் கொடி தமிழ்நாடெங்கும் படர்ந்து பூத்துக் காய்த்துப் பழுத்துப் பெரும் பயன் நல்க விரும்புகிறோம். அறிவுக்கொடியின் வளர்ச்சிக்குத் தமிழ்மக்களில் ஆண் பெண் இருபாலாரும் எல்லா உதவியையும் செய்யவேண்டுகிறோம்.

### திருக்குறள் நாட்குறிப்பு

திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்டுள்ள 1937-ம் வருஷத்திய நாட்குறிப்பு கிடைக்கப்பெற்றோம். டைரிகளுக்கு வேண்டிய எல்லா முக்கிய அம்சங்களும் ஏறக்குறைய அடங்கியுள்ளன. 1097முதல்1330வரையுள்ள குறள் மணிகள் கருத்துரையுடன் அடங்கியுள்ளன. கையடக்கமாக அழகிய பைண்டு, தெளிவான அச்சு, உயர்ந்த தாள் முதலியவற்றுடன் சிறந்து விளங்குகிறது. சாத்ாரண டைரி அணு 5. பென்ஸிலுடனும் எலாஸ்டிக் ரப்பருடனும் கூடியது விலை 6 அணு.

### அபேதவாதம் எதற்கு?

[ஆங்கிலத்தில் ஜெயப்பிரகாஷ் நாராயணர் எழுதிய நூலின் மொழிபெயர்ப்பு விலை அணு 10. பக்கம் 211 கிடைக்குமிடம் புது நூற்பதிப்பு நிலையத்தார் "மார்க்ஸ் ஹவுஸ்" தியாகராய நகர், சென்னை.]

அபேதவாத உணர்ச்சி நாட்டில் பலப்பட்டுக் கொண்டிருக்கிறது. ஆனுல் சோஷலிஸத்தைப்பற்றி ஜனங்களிடையே தெளிந்த அபிப்பிராயம் கிடையாது. அபேதவாதத்தின் லட்சியம் ஒன்றேயாயினும் அதன் உருவங்கள் மேலைநாட்டிலே பலமாதிரியாக இருக்கின்றன. அவற்றில் இந்தியாவிற்கு ஏற்ற அபேதவாதம் எது? அதுஎத்தகையது? அதை ஸ்தாபிப்பதற்குரிய மார்க்கமென்ன? என்ற விஷயங்களை அழகாக விளக்குமுகத்தான் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட இந்நூல் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அபேதவாதத்தைப்பற்றிப் பொதுவான ஒரு ஆரம்ப ஞானம் உண்டாவதற்கு இந்நூல் மிகுந்த உபயோகமாக இருக்குமென்று கருதுகிறோம். புத்தகம் நல்லகாகிதத்தில் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது.

## நாய்க்கு 4000 பவுன்

ஒயிட் ஸிடி என்ற விடத்தில் கிரே ஹவுண்ட் நாய்ப் பந்தயம் ஒன்று நடைபெற்றது. அதில் 'பைன் ஜூபிலி' என்ற நாய் வெற்றிபெற்றது. அது பெர்க்ஷயரிலுள்ள ஒரு சீமாட்டியுடையது. பலர் அந்நாயை வாங்க முன் வந்தனர். நாலாயிரம் பவுன் வரை அளிப்பதாகக் கூறப்பட்டது. அப் பெண்மணிக்குத் தம் நாயை விட்டுப் பிரிய மனமில்லை. "எங்கள் அன்புஅத்தகையது. என் நாயைப் பிரிந்து நான் சந்தோஷமடையேன்" என்று அப் பெண்மணி கூறிப் பணத்தை மறுத்தாள்.

## நிராகரிக்கப்பட்ட தீர்மானங்கள்

அகில பர்மா தனவணிகர் மகாநாட்டின் விஷயாலோசனைக் கூட்டம் 29-11-36உ இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கக் கட்டிடத்தில் நடைபெற்றது. பின்வரும் இரண்டு தீர்மானங்கள் ஆலோசனைக்கு வந்தன. பலத்த விவாதத்திற்குப் பின் அவ்விரண்டு தீர்மானங்களும் நிராகரிக்கப்பட்டன.

1. தாய்நாட்டிலுள்ள நம்மவர்கள் தேசிய மகாசபையான காங்கிரஸில் ஈடுபட்டுத் தீவிரமான தேசப்பணியாற்றிவருவதை இம்மகாநாடு மகிழ்ச்சியோடும் பெருமையோடும் வரவேற்கிறது.

2. நாளது நவம்பர் 14உ கோவிலூரில் நடைபெற்ற நமது 96 ஊர் நகரத்தார் கூட்டத்தில் போலீஸார் தலையிட்டது அநுசிதம் என்று இம்மகாநாடு கருதுகிறது.

---

### காடநேரி வரவேற்பு விழா

(ஒரு நிருபர்)

டிசம்பர் மீ 3-ம் தேதி மாலை 3-30 மணிக்கு ஸ்ரீமான் உடையப்பா அவர்கள் அண்மையில் நடந்தேறிய இராமநாதபுரம் ஜில்லா போர்டு தேர்தலில் வெற்றி பெற்றமைக்கு காடநேரிப் பொது மக்கள் பலர் குழுமி வரவேற்று ஊர்வலம் நடத்தி மாலை 4-30 மணிக்கு ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்திற்கு வீனநேரி ஸ்ரீமான் பெரியணத் தேவர் அவர்கள் தலைமை வகித்தார். ஸ்ரீமான் சிதம்பர அம்பலம் அவர்களால் வரவேற்புப் பத்திரம் வாசித்துக் கொடுக்கப்பெற்றது. அல்லாழப்பேரி ஸ்ரீமான்கள் பி. முத்தக்கருப்பத் தேவர், சிங்கம், ஆர். வி. சுவாமிநாதன், உடைப்பா ஆகியவர் பேசினர். தலைவருடைய முடிவுரைக்குப் பின் வந்தனோபசாரத்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

## விளம்பரம்.

சிவகெங்கையை அடுத்த கானையார் மங்கலத்திலிருக்கும் செ. கரு. கருப்பஞ்செட்டியார் மகன் நாட்டுக்கோட்டைசெட்டி ஜாதி செ. கரு. குப்பாஞ் செட்டியார் தெரிவித்துக்கொள்ளுவதாவது:—

என் வசத்திலிருக்கும் சொத்துக்கள் என்னுடைய சொந்த சம்பாத்தியமுள்ள சொத்துக்கள். அவைகளில் என்னுடைய மகனுக்கு யாதொரு பாத்தியமும் கிடையாது. என்னுடைய மகன் சுமார் 24 வயதுள்ள ராமஞ் செட்டி என்பவர் என்னுடைய வருதிக்கு உள்படாமல் கெட்ட நடத்தையுள்ளவர்களிடம் சகவாசம் வைத்துக் கொண்டு அவனுடைய சினேகிதர்களுடைய துர்ப்போதனைக்கு உள்பட்டு துர் விநியோகம் செய்துவருகிறார். சொல்பத் தொகைகளைக் கொடுத்து ஜாஸ்தி தொகைகளில் தஸ்தவேஜுகள் பிரர்கள் அவனிடம் எழுதிவாங்க முயர்ச்சிசெய்துகொண் டிருப்பதாகத் தெரிகிறது.

ஷை ராமஞ் செட்டியாருக்கு கடன் கொடுக்கிறவர்கள் என்னையும் என்னுடைய சொத்துக்களையும் நம்பி கடன் கொடுக்கும் பக்ஷத்தில் அப்படிப்பட்ட கடன்கள் என்னையும் என்னுடைய ஸ்தாவர சங்கம சொத்துக்களையும் கட்டுப்படுத்தமாட்டாது.

செ. கரு. குப்பாஞ் செட்டியார்,
கானையார்மங்கலம்,
9—12—36.

வெகு விரைவில் வருகிறது! உங்களூர் முக்கிய தியேட்டர்களுக்கு!

# "டேஞ்சர் சிக்னல்"

(தமிழில்)

கொலை—பயங்கரம்—திடுக்கிடும் சம்பவங்கள்—நகைப்பு—சோகம்—ஆச்சர்யம் ஆகியவைகள் ஒருங்கே அமைந்துள்ளது.

**R.B. லெக்ஷிமிதேவி, P.S. ஸ்ரீனிவாசராவ்**

முதலிய நடிகத் திலகங்கள் திறமையுடன் நடித்தது.

மோஹன் சவுண்ட் ஸ்டுடியோவில் தயாரித்தது.

தேவையானவர்கள் எழுதுக:—

**ராம்நிக்லால் மோஹன்லால் & கோ.,**
சிக்பேட்டை, பெங்களூர் ஸிட்டி.

ரிஜிஸ்ட்டர்.



டிரேட்மார்க்.

## நீரழிவுக்குக் கைகண்ட மருந்து.
## பழனி R. M. K. அப்ரேக் செந்தூரம்.

இதோ! ஒரு மருந்துக்கும் வசப்படாத வியாதி இந்த மருந்தில் தீருவது ஆச்சரியமாயிருக்கிறது. இப்படி ஸ்ரேஷ்டமான மருந்து இதுவரை வெளிவரவில்லை. எந்த மருந்திலும் தீராத வியாதிகள் இதில் அவசியம் தீரும். நீரழிவினுல் ஜாஸ்தி போகும் நீரை நிறுத்தும், தாகத்தைக் குறைக்கும். நாட்பட்ட அஸ்திவெட்டை, நீரோடு இந்திரியம் உடைந்து விழுதல், ஈ, எறும்பு மொய்த்தல், நாவரட்சி, மலபந்தம், உடம்பெரிவு, வெள்ளை, கடுப்பு, எரிச்சல் முதலிய சகலவித கர்ம வியாதிகளையும் கண்டிப்பாய் நிவர்த்தியாகும். நீரிலுள்ள சர்க்கரையைக் குறைத்து சரீர வெளுப்பும் மாற்றி தேஜஸ் பலம் கொடுக்கும். நீரழிவால் வரும் பிளவை, ரணங்களை ஆற்றும். பசி தீபனங்களை உண்டாக்கும். ஜீவாதார நரம்புகளை முறுக்கேற்றி தாதுபுஷ்டியைக் கொடுக்கும். 40 நாள் மருந்து ரூ 40. அனுபானம் ரூ. 10. ஆக ரூ. 50. 20 நாளைக்கு ரூ. 25. ஏழைகளுக்குப் பாதிவிலை.

**வைத்திய ஆசிரியர், ஆர். எம். கே. வேலுசாமி,**
சித்த வைத்தியசாலை, பழனி.

தந்தி விலாசம்:—வேலுசாமி, பழனி.

பிராஞ்சு:—146, புரசவாக்கம் ஹைரோடு, சென்னை.

(சென்றவாரத் தொடர்ச்சி)

"இன்பவடிவே! காயங்களெல்லாம் சொஸ்த்தமாகி விட்டது. என்மேல் விழுந்த ஒவ்வொரு அடியும் உன் காதற்பரிசேனவே மதித்தேன். என்மனதில் காதல் மரம் தழைத்தோங்காதிருந்தால் ........இந்த சமஸ்த்தானத்தின் அதிகார வர்க்கத்தின ரெல்லாம் என் துப்பாக்கிக்கு இரையாகி வெகுகாலமாகி இருக்கும். உன் காதலுக்கு அடிமையாகி என் வீரத்தையும் பலத்தையுமிழந்தேன் ஆனல்...........உன்காதலொன்றே என்னைப் புனிதனுக்கியது. அதுவே என் கோரே சிந்தையை மாற்றியது என் நெஞ்சத்தில் வேரூன்றி இருந்த பழிவாங்கும் நோக்கம் அகன்று விடவே என் கூட்டத்தாரையும் வே..................

சண்முகபுரியில் எங்கும் புதிதாக அவ்வூர் "ஜவகர்" பார்க்கில் திறுவப்பட்டிருக்கும் "சில்க்-பஸாரை" ப்பற்றிய பேச்சுக்கள் தான். உலகத்தில் பலபாகங்களிலிருந்தும் கண்களைக் கவரும் பலவித ஸில்க் தினுசுகளைத் தருவித்து வியாபாரம் செய்து வந்தான், அதன் முதலாளியாகிய "மோஹன்லால்"

என்றுமில்லாது அன்று "ஸில்க்பஸாரில்" ஓர் பரபரப்புக் காணப்பட்டது. வேலையாட்களெல்லாம் இங்குள்ளதை அங்கு மாற்றி, அங்குள்ளதை இங்கு மாற்றி அழகு படுத்திக் கொண்டிருந்தனர். நாற்றுக்கணக்கான மின்சார விளக்குகள் ஏற்றப்பட்டன, விரித்துப் போடப்பட்டிருந்த பட்டுகள் எல்லாம் பார்ப்பவர் கண்களின் பிரகாசம் குன்றும்படி தகதகவென மின்னிக்கொண்டிருந்தது. (காஷ்) பணம் வாங்குமிடத்தில் அமர்ந்திருந்த அதன் சொந்தக்காரருக்கு ஜமீந்தாரின் வருகை அறிவிக்கப்பட்டது. மோஹன்லால் உடனே எழுந்து சென்று வந்துகொண்டிருக்கும் ஜமீந்தார், ஜெயா, உக்ரமசேனன் முதலியோரை வரவேற்று உபசரித்து "பிரபோ! தங்களுடைய வருகையால் இவ்வியாபார ஸ்தலம் பெருமையடைகிறது. இவ்வாசனங்களில் அமரவேண்டும், குழந்தை ஜெயா அம்மாவின் கல்யாணத்திற்கென்றே நூதன சைஸ்கள் பல தருவித்திருக்கின்றேன்" என்று மகிழ்ச்சியுடன் கூறி ஜெயாவை நோக்கினன். அவளும் தன் கல்யாண விஷயத்தைப்பற்றிப் பேசும் அந்த வியாபாரியை நோக்கினள். வதனத்தில் ஓர் பிரகாசம் தோன்றியது. பொலிவற்றிருந்த அவள் வதனம் பொலிவுற்று விளங்கியது. மோஹன்லால் தன் ஆட்களுக்குச் சைகை செய்ய, அவர்கள் ஏராளமான சில்க் தினுசுகளை கொண்டுவந்து ஜமீந்தாரின் முன் பரப்பினர். ஜமீந்தாரும் உக்ரமசேனனும் தமக்கு வேண்டியவற்றை பொறுக்கி எடுத்துக் கொண்டிருந்தனர். ஜெயாவின் நாட்டமெல்லாம் அந்த மோஹன்லால் மீதே இருந்தது. அப்பொழுது மோஹன்லால் "இந்த மிருதுவான ஸில்க் பிரான்ஸ் தேசத்திலிருந்து தருவிக்கப்பட்டது" என்று கூறி ஓர் ஸில்க் பீசை எடுத்து ஜெயாவிடம் காண்பித்தான். ஜெயா அதைக்கையில் வாங்கும் போது ஓர் துண்டு கடிதம் கீழேவிழ அதை எடுத்து நோக்கினள். அதில் "ஜாக்கிரதை உணர்ச்சியைக்கட்டுப்படுத்து, இன்று இரவு உன் அறையில் சந்திக்கிறேன்" என்று எழுதி இருக்கக் கண்டாள். சடுதியில் அக்கடிதத்தை மறைத்து விட்டு புன்சிரிப்புடன் மோஹன்லாலை நோக்கி "ஹூம் ஹூம்! அப்படியா! இது நன்ருகவே இருக்கிறது, சரி இதிலொரு பீஸ் இருக்கட்டும்" என்றுகூற அவனும் "சந்தோஷம்" என்று கூறி, மேலும் பல சேலைதினுசுகள் ஜம்பர் ஸில்க்ஸ் முதலியவற்றைக்காண்பித்தான். அவைகளிலெல்லாம் தனக்குப் பிடித்த சிலவற்றை எடுத்துக் கொண்டாள் ஜெயா. இதற்குள் ஜமீந்தாரும் ஏராளமான ஸில்க்குகளை தனக்கென்று வாங்கிக் கொள்ளவே, பில்லையும் சாமான்களையும் அரண்மனைக்கு அனுப்பிவிடும்படி மோஹன்லாலிடம் கூறிவிட்டு ஜெயாவுடன் அங்கிருந்து புறப்பட்டார்.

இரவு 8 மணி இருக்கும். தனக்குத்

## காதலும் கடுந்தியாகமும்

N. S. S. தரன், சண்முகநாதபுரம்.

தூக்கம் வருகிறதெனக் கூறித் தன் தோழிகளை எல்லாம் தனதறையினின்றும் அனுப்பிவிட்டாள் ஜெயா அவள் மனதில் புதைந்துகிடந்த துக்கமெல்லாம் போன இடம் தெரியாது மறைந்தது. தன்னை எவ்வளவுதூரம் அலங்கரித்துக்கொள்ள முடியுமோ அவ்வளவும் அலங்கரித்துக்கொண்டு ஓர் மணப்பெண் போல் விளங்கினள். அப்பொழுது "அம்மா! அம்மா!"வென்று கூவி கதவை இடிப்பதைச் செவியுற்று கதவைத் திறந்தாள். நாலைந்து மனிதர்கள் தலையில் ஓர் கள்ளிப்பெட்டியைச் சுமந்து நிற்பதைக்கண்டு உள்ளே வரும்படி சமிக்ஞை செய்ய அவர்களும் பெட்டியைக்கொண்டுவந்து அவ்வறையில் ஓர் மூலையில் வைத்துவிட்டு "இப்பெட்டியில் ஸில்க்குகள் இருக்கிறது. ஜமீந்தாரய்யா இதை இங்கு சேர்க்கும்படி சொன்னுங்க" என்று கூறி வணங்கிச் சென்றனர். அவர்கள் சென்றதும் ஜெயா கதவைத் தாளிட்டுவிட்டுவந்து மஞ்சத்தில் அமர்ந்தாள். அப்பொழுதிருந்த மனவெழுச்சியால் பெட்டியில் நாட்டங்கொள்ளவில்லை. எழுந்து அங்குமிங்கும் உலாவினள். ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு யுகமாகக் கழிந்தது. தன் மன வெழுச்சிக்கும் மகிழ்ச்சிக்கும் காரணமாயிருந்தது "அந்த ஸில்க்கு" பஸார்தான். ஆகவே அங்கிருந்துவந்த சாமான்களைப் பார்வையிட வேண்டுமென்ற ஆவல் ஒருபுறம் வதைத்தது. எழுந்துசென்று கள்ளிப் பெட்டியின்மேல் மூடியைத் திறந்து மேலிருந்த நாலைந்து பீஸ்களை வெளியில் எடுத்துவைத்தாள். மேலும் பீஸ்களை எடுந்த பெட்டியின் பக்கம் திரும்பியவள் பயந்து கூக்குரலிட வாயைத் திறந்தாள். அப்பொழுது அப்பெட்டியிலிருந்து வெளிப்பட்ட மனிதன் ஒரு விநாடியில் அவளின் மன நிலையை அறிந்து 'ஜெயா! நான் அன்னியனல்ல!' என்று கூறி தன் மாறுவேஷத்தைக் கலைத்து விட்டு சுயஉருவில் நின்ருன். தன்முன் நிற்கும் மனிதனை வியப்புடன் உற்று நோக்கினள். அவளுக்கு ஏற்பட்டிருந்தபயம் அகன்றது, சந்தோஷம் எல்லையைக் கடந்தது; "அன்பரே என்ற வார்த்தைகள் அதிக தழதழப்புடனும் உருக்கத்துடனும் அவள் வாயினின்றும் வெளிப்போந்தன கண்களிலிருந்து பல நீர் முத்துக்கள் பலபலவென உதிர்ந்தன. பரிதாபத் தோற்றத்துடன் கூடிய அவள் வதனம் எவர் மனதையும் உருக்கும்படியான நிலையிலிருந்தது. இந் நிலையிலேயே ஒரு சில நிமிஷங்களும் கழிந்த பின் ஜெயா "அன்பரே! இப்பாவி என்னல் நீங்களடைந்த தண்டனையை நினைக்கவும் என் மனம் நடுக்குறுகிறது............என்னை........இச்சண்டாளியை மன்னிப்பீர்களா?

"மன்னிப்பதா? யாரை? ஜெயா! நீ அன்று தக்க சமயத்தில் எனது ஆட்களுக்கு எச்சரிக்கைசெய்தும் அவர்களுடைய தாமதத்தால் நான் கஷ்டப்பட நேர்ந்தது அதற்கு நீ என்ன செய்வாய்? கடந்துபோன விஷயங்களைப்பற்றிப் பேசி இவ்வருங்காலத்தை வீணக்கவேண்டாம். ஆனல் ஒன்று. நீ அன்று எவ்விதம் எனது ஆட்களுக்கு எச்சரிக்கை செய்தாய் என்பதுதான் எனக்கு விளங்கவில்லை"

"அன்பரே அன்று நான் பயத்தால் மூர்ச்சையாகிய பின் நீண்ட நேரத்திற்குப்பின் விழித்தெழுந்தேன். நான் என்னறையிலிருக்கக் கண்டேன். மணி இரவு 9 ஆகியிருந்தது. என் மனதில் பயமும் குழப்பமும் அதிகரித்தது முக்கியமாக உங்களைப்பற்றிய கவலை தான் என்னை வாட்டி வதைத்தது. இதுபற்றி அரண்மனையில் நிலைமை எவ்விதமிருக்கிறதென்றறிய ஆவல்கொண்டு என் தந்தையின் அறையின் பக்கமாகச் சென்றேன். அவ்வறையில் என் தந்தையும் உக்ரமசேனனும் இவ்விஷயத்தைப்பற்றிச் சம்பாஷித்துக்கொண்டிருப்பதை யறிந்து வெளியிலிருந்து உற்றுக் கேட்டேன். என் தந்தை அதிக கோபத்துடனேயே இருக்கிருர் என்பதை அவர்கள் சம்பாஷணையிலிருந்து அறிந்தேன். அவர் உறுதியாக உக்ரமசேனனிடம் அந்த திருட்டுப் பயலை ஓர் மரத்துடன் சேர்த்து பிணைத்து உயிர் போகும்வரை சவுக்கினலேயே அடித்துச் சித்திரவதைச் செய்யுங்கள். இத்தண்டனையை நாளை காலையிலேயே நிறைவேற்றிவிட வேண்டுமென்று கட்டளையிட்டது என்னை நடுங்கச் செய்தது. அவனும் அவ்விதமே செய்துவிடுவதாகக் கூறிவெளியே வருவதை யறிந்து நான் என் அறைக்குச் சென்றுவிட்டேன்.

எவ்விதமும் இவ்விபத்தினின்றும் தங்களைக் காப்பாற்ற வேண்டுமென்ற ஒரே எண்ணந்தான் என் மனதில் குடிகொண்டது. அவ்வழியில் என் உயிரையும் தியாகம் செய்யத் தயாரானேன். எனக்கு அன்று ஏற்பட்ட தைரியமும் ஊக்கமும் அதற்கு முன் ஏற்பட்டதே இல்லை. உங்களை எவ்வழியில் காப்பாற்றுவதெனச் சிறிது சிந்தித்தேன். சட்டென்று அதற்கு ஒரு வழியும் தோன்றியது. என் தந்தையுடன் வேட்டைக்குச் செல்லும்போது அணிந்துகொள்ளும் ஆணுடையை எடுத்து அணிந்துகொண்டு கையில் ரிவால்வாருடனும் நீங்கள் முன் என்னிடமளித்த சங்குடனும் அரண்மனையைவிட்டு யாரு மறியாவண்ணம் வெளிப்பட்டு பூனை மலைக்காட்டின் ஆரம்பத்தையணுகி சங்கை ஊதினேன். உங்களுடைய ஆட்களில் ஒருவன் திடீரெனத் தோன்றினன். அவனிடம் விஷயத்தைக் கூறி அதிகாலையில் அரண்மனையின் பக்கத்திலுள்ள மைதானத்தில் சகலரும் திடுக்கிடும் வண்ணம் திடீரென்று தோன்றி உங்கள் தலைவனைக் காப்பாற்ற வேண்டுமெனக் கூறினேன். அந்த ஆள் நான் கூறியதில் சந்தேகம் கொண்டவன் போல் தோன்றினன் இதை அறிந்த நான் நீங்கள் முன் என்னிடமளித்திருந்த உங்கள் கூட்டத்தின் அடையாளத்தைக் காண்பித்தேன். அதன் பின்தான் என் வார்த்தையில் அவனுக்கு நம்பிக்கை ஏற்பட்டது போலும். அவனது முகம் கோபத்தால் சிவந்தது. "உம் அப்படியா? எங்கள் தலைவனைக் காப்பாற்ற எங்கள் ஒவ்வொருவருடைய உயிரையும் இழப்போம்" என்று கூறிக் கொண்டே எனது பதிலையும் எதிர்பாராது ஆவேசம் கொண்டவன் போல் காட்டினுட் புகுந்து ஓடினன். என் மனம் நிம்மதியும் நம்பிக்கையுமடைந்து திரும்பி அரண்மனை சேர்ந்தேன். ஆயினும் அக்கொடிய இரவை நரக வேதனைகளிடையே கழித்தேன். பொழுதும் புலர்ந்தது. மைதானத்தின் பக்கமாக எனதறையிலிருக்கும் ஜன்னலைத் திறந்தேன். ஜனக்கடலின் அலை ஒலிகள் வானைப் பிளந்தன...........என் மனதிலும் சிறிது அவநம்பிக்கை தோன்றியது. இவ்வளவு ஜனக் கூட்டத்தில் உங்களுடைய சிறிய தொகையினர் எவ்விதம் புகுந்து உங்களைக் காப்பாற்றப் போகிருர்கள் என்ற விஷயம் என் சிந்தையைக் கலக்கியது. ஆனலும் உங்கள் கூட்டத்தினர் எவ்விதம் தோன்றப் போகிருர்களோ பார்ப்போம் என்று எண்ணிக்கொண்டிருக்

(17-ம் பக்கம் பார்க்க)


திருச்சியில் இருந்த பல் டாக்டர் K. அஸுமா

:: ஜப்பானிய ::

# பல் ஆஸ்பத்திரி

புதுக்கோட்டை




அக்டோபர் மீ 1-ந் தேதி முதல்

புதுக்கோட்டை, செட்டிமார்நாடு மகாஜனங்களின் சவுகரியத்தை முன்னிட்டு புதுக்கோட்டைக்கு, வெல்லிங்டன் ரோடில் ஆனந்தபாக் வடபுரம் உள்ள ஜயவிலாஸ் பங்களாவில் பல் வைத்தியம் செய்கிறார்.



## முக்கிய அறிவிப்பு

அமிர்தாஞ்சன் டெப்போவின் படை சங்காரக் களிம்பு.

இதற்கு முன்பு நமது வில்லியம் கம்பெனியின் "ராஜா—ராணி" வர்த்தகக்குறி போட்ட படை சங்காரக் களிம்பு இப்போது அமிர்தாஞ்சன் டெப்போவின் மூன்று வர்ண "உதய சூரியன்" ஆக மாற்றப்பட்டிருக்கிறது. இதன் விஷயத்தை முக்கியமாய்க் கவனிக்கும்படி நமது வாடிக்கைக்காரர்கள் அனைவரையும் கேட்டுக்கொள்ளுகிறோம்! வர்த்தகக்குறி மாற்றப்பட்டதால் நமது மருந்தின் உற்பத்தி முறையும் அதன் இயல்பும் எவ்விதத்தும் மாறுபடவில்லையென்று உறுதி கூறுகிறோம்.

அமிர்தாஞ்சன் லிமிடெட்,

பம்பாய், சென்னை, கல்கத்தா.




## அகில பர்மா செட்டியார்கள் மகாநாடு.

## பிரிவினை காரணமாய்ப் புதுவரி கூடாது.

## நகரத்தார் பணஉதவியும் நிலச்சீர்திருத்தமும்

## மகாநாட்டுத் தலைவர் சொற்பொழிவு

30-11-36 திங்கள்கிழமை பசுமந்தானில் கூடிய அகில பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் மகாநாட்டின் தலைவர் திருவாளர் ராம. அரு. அரு. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் நிகழ்த்திய தலைமையுரை.

கனவான்களே!

பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கத்திற்கும், பின் இம் மகாநாட்டிற்கும் என்னைத் தலைவராய்த் தெரிந்தெடுத்தமைக்கு நன்றியறிதலை முதலில் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இவ்வித மகாநாடு ஒன்று கூட்டவேண்டுமென்று நாம் யத்தனித்தகாலையில் செட்டிநாட்டுக் குமார ராஜா அவர்களைத் தலைவராகத் தருவிக்க வேண்டுமென்பது நம்மவர்களின் பேரவா. தனிப்பெருங் கடவுளது கருணையினலேயே இன்று அவர் சென்னை மாகாணத்தின் கல்விமந்திரியாக அமர்ந்திருப்பது பர்மா நகரத்தாரனைவர்க்கும் அளவில்லாமகிழ்ச்சியளித்திருக்கிறது. இந்தியாவில் மந்திரிகளாக இதுவரை வந்தவர்களில் குமார ராஜா அவர்களே வயதில் சிறியவர்களென நினைக்கிறேன். அறிவும் ஊக்கமும் உழைப்பும் நிறைந்த இவர்போன்ற இளைஞர்களை நமது சமூகம் உற்பத்தி செய்துவரும் வரையில் அதனுடைய பண்டைப் புகழ் குன்றக் காரணமில்லை.

பர்மாவின் சரித்திரத்தில் ஓர் முக்கிய சமயத்தில் இம்மகாநாடு கூடுகிறது. ஏறக்குறைய நூறுண்டுகளாக பர்மாவிற்கும் இந்தியாவிற்கும் இருந்து வரும் நெருங்கிய அரசியல் தொடர்பு 1937-எப்ரல் முதல் தேதியிலிருந்து வெட்டி விடப்படும். இம் முக்கிய சம்பவத்தால் பல பிரச்னைகள் எழுகின்றன. அவைகளில் அவசியமானவற்றை ஆலோசிப்பதற்கு இம்மகாநாடு ஏற்ற ஓர் சந்தர்ப்பமாகும்.

### போதுநலம்

இந்நாடு நமக்கு இரண்டாவது தாயகமாய்விட்டது. இந்நாட்டில் அதிக மூலதனம் போட்டிருக்கிறோம். நம்முடைய வாழ்க்கையில் நல்ல பருவகாலத்தைத் தொழில் முறையில் இங்கு செலவிடுகிறோம். குடும்பத்துடன் இவ்விடம் வரப் பலர் ஆரம்பித்துள்ளார்கள். இந்நாட்டின் நன்மை தீமைகள் நம்மைப் பாதிக்கின்றன. ஆதலால் இந்நாட்டுப் பொதுஜன நன்மைக்கும் முன்னேற்றத்திற்கும் மனம் வாக்குக்காயத்தால் நம்மாலியன்ற உதவிகள் செய்வது நமது கடமை.

### அரசியல் சீர்திருத்தம்

இந்நாட்டின் அரசியல் சீர்திருத்தத்தில் அநேக குறைகளிருக்கின்றன. பொது மக்களுக்கு அது திருப்தியளிக்கவில்லை. புது அரசியலில் சர்க்காரின் செலவினம் பல வழிகளில் அதிகரிக்கும். எனினும் சர்க்காரோடு ஒத்துழைத்து இச் சீர்திருத்தத்தை வெற்றி பெற வேலை செய்து இந் நாட்டுக்கு ஏற்ற விதமாய்த் திருத்தியமைக்க முயலுவது சிறந்த கொள்கையாகும். அதனை உடைத்தெறிய முயற்சிப்பது சிறந்ததாகாது.

பர்மா சட்டசபையில் ஏகோபித்து வேலை செய்வதற்கு பிரதிநிதிகள் சபையிலுள்ள இந்தியர்கள் ஒரு கட்சியாய் ஒற்றுமைப்பட்டிருப்பதை வரவேற்கிறோம். நிலைத்த மந்திரிசபையிருக்கும்படி இதர கட்சிக்காரர்களோடு இவர்கள் ஒத்துழைப்பார்களென நம்புகிறோம்.

### பர்மாவில் இந்தியர் பிரவேசம்

இந்நாட்டிற்கு இந்தியர்கள் வந்து போவது குறித்து பர்மா கவர்னருக்கு அளித்துள்ள ஆக்ஞா பத்திரத்தின் வாசகம் இந்தியர்கட்குப் பெரும் ஏமாற்றத்தையும் கவலையையும் அளித்திருக்கிறது. கைவேலை அறியாத தொழிலாளிகள் வருவதைத் தடைசெய்யவோ அல்லது கட்டுப்படுத்தவோ இந்தியா கவர்ன்மெண்டின் அநுமதி பெற்று பர்மா கவர்ன்மெண்டார் செய்வதற்கு அதிகாரம் இருக்கவேண்டும் என்றும், இதர இந்தியர்கள் வருவதற்கு எவ்வித தடை செய்வதற்கும் அதிகாரமிருக்கக்கூடாதென்றும், இதனை கவர்னருக்கு அளிக்கும் ஆக்ஞா பத்திரத்தில் விளக்குவதென்றும், 1935-ம் வருடம் எப்ரல் மாதம் பத்தாம் தேதி பார்லிமெண்டில் நடந்த விவாதத்தில் சர்க்கார் தரப்பில் ஒப்புக்கொள்ளப்பட்டது. அவ்விதம் தரப்பட்ட வாக்குறுதி நிறைவேற்றப்படவில்லை. சில நாட்களுக்கு முன் வெளிவந்திருக்கும் பர்மாகவர்னருக்கு அளிக்கப்பெறும் நகல் ஆக்ஞா பத்திரத்தின் இருபதாவது பிரிவில் இந்தியர்கள் இந்நாட்டிற்கு வருவதைத் தடைசெய்யக்கூடிய ஓர் மசோதாவும் இந்தியாவின் கவர்னர் ஜனரலைக் கலந்துகொள்ளாது கொண்டுவருவதற்கு பர்மா கவர்னர் அநுமதிக்கக்கூடாதென்றும் கை வேலை அறியாத இந்தியக் கூலிகள் பர்மாவிற்கு வருவதை ஒழுங்கு செய்யும் நோக்கோடு பர்மா கவர்னரும், இந்தியாவின் கவர்னர் ஜெனரலும் கலந்துபேச வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதனைக் கண்டித்து இந்தியாவிலுள்ள வியாபார சங்கங்களும் பொதுஜனத் தலைவர்களும் ஆங்கில கவர்ன்மெண்டுக்குத் தந்திகள் கொடுத்துள்ளார்கள். இதனைக்குறித்து பார்லிமெண்டில் நடந்த விவாதத்தில் இந்தியா உதவி மந்திரியும், அட்டர்னி ஜெனரலும் ஏதேதோ சமாதானங்கள் கூறுகிருர்கள். 1935 எப்ரல் மாதம் பார்லிமெண்டில் செய்த வாக்குறுதியை நிறைவேற்றி வைப்பது ஆங்கில கவர்ன்மெண்டின் கடமையாகும். பிரபுக்கள் சபையிலாவது இவ்விஷயம் ஆலோசிக்கப்படும்பொழுது நியாயம் வழங்கப்பெறுமா என்பதைப் பொறுத்துப் பார்ப்போம்.

### மத்திய இலாக்காக்கள்

இதுவரை மத்திய கவர்ன்மெண்டின் மேற்பார்வையிலிருந்து வரும் எல்லா இலாக்காக்களும் பிரிவினை காலமுதல் பர்மா கவர்ன்மெண்டின் நேர் பார்வைக்கு வந்து விடுகின்றன. இவ் விலாக்காக்களின் பர்மா சம்பந்தமான தனி வரவு செலவுகளை புது அரசியலின் கீழ் ஏற்படவிருக்கும் சட்டசபைகளில் சமர்ப்பிக்கப்படும் முதல் பட்ஜெட்டிலிருந்துதான் நாம் தெளிவாய அறிந்து கொள்ளக்கூடும். அவ் வரவு செலவுகளின் நிலைமை எவ்விதமிருந்தாலும் பிரிவினை காரணங்கொண்டு எவ்வித புது வரிகளும் ஏற்படக்கூடாதென்பதை வற்புறுத்துவது நமது கடமையாகும். பிரிவினையினல் 2 கோடி முதல் $2\frac{1}{2}$ கோடி வரை மிச்சமேற்படும் என்று இதுவரை பறைசாற்றப்பட்டு வந்திருப்பதால் புது வரிகட்கு முகாந்தரமில்லை. சிறப்பாக தபால் தந்தி இலாக்காக்களின் வரவு செலவுகளை சரி செய்து கொள்வது மரபு. பிரிவினையின் காரணமாக இந்தியாவிற்கும் பர்மாவிற்கும் இடையே உள்ள தபால் தந்தி விகிதங்களைக் கூட்டுவதற்கு முயற்சிக்கக் கூடாது என்பதை நாம் சர்க்காருக்கு வற்புறுத்த விரும்புகிறோம். கூடிய விரைவினில் சென்னைக்கும் பர்மாவிற்கும் ரேடியோ டெலிபோன் வசதி ஏற்படவிருக்கிறது. அவ் வசதியை வியாபாரிகள் பெரிதும் விரும்புவர். அதிகப்படாத விகிதம் ஏற்பட்டால் பர்மாவிற்கும் இந்தியாவிற்கும் இடையே டெலிபோன் வசதி வியாபாரிகளால் அதிகமாய் உபயோகப் படுத்தப்பெறுமென்பதில் ஐயமில்லை.

### சென்னை—ரங்கூன் நேர் தபால்

இவைகளையெல்லாம் விட வியாபார உலகிற்கு சிறப்பாகத் தென்னிந்தியர்களுக்கு இன்றியமையாதது இரங்கூன்—சென்னை நேரடித் தபால் வசதி. பர்மாவின் அரிசியில் பெரும்பாகம் இந்தியாவிற்கும் சிறப்பாகத் தென்னாட்டிற்கும் செல்வதாலும் தென்னிந்தியர்களுடைய பணமே இந்நாட்டில் அதிகமாகப் புழங்குவதாலும் இவ் விரு பிரதேசங்களுக்கும் அதிகமான கடிதப்போக்குவரவு ளிருப்பதாலும் இவ் வசதியைத் தொடர்ந்து இருந்து வரச் செய்வது பர்மா சர்க்காரின் கடமையாகும். இடையே நிறுத்தப்பட்ட இம் மெயில் வசதி எக்காரணங்கள் கொண்டு மறுபடியும் துவக்கப்பட்டதோ அக்காரணங்கள் பர்மா பிரிவினையினலோ மற்றதனலோ மறையவோ குறையவோ இடமில்லை. 1937 மார்ச்சு மாதத்தோடு மெயில்கள் எடுத்துச் செல்வதற்கு பி. ஐ. எஸ். என். கம்பெனிக்குக் கொடுத்திருக்கும் கண்டிராக்ட் முடிவடைகிறது. பர்மாவின் நலன் கருதி பர்மா சர்க்காரும் கப்பல் கம்பெனிக்குத் தரவேண்டிய (சப்-சைடி) செலவுத் தொகையில் தங்கட்குரிய பங்கைக் கொடுத்து சென்னை—இரங்கூன் நேரடித் தபால் வசதி யிருந்து வரும்படி பார்க்க வேண்டியது அவசியமாகும்.

### வருமான வரி

வருமானவரி சம்பந்தப்பட்ட வரையில் தற்காலிகமாக விதிக்கப்பட்ட சர் சார்ஜில் எஞ்சிய பாகத்தையும் இந்தியச் சட்ட சபையில் கொடுத்த வாக்குறுதிக் கேற்ப இவ் வருடத்தில் எடுத்துவிட வேண்டும். பிரிக்கப்பட்ட பர்மாவில் வருமானவரி வசூலிப்பது குறித்து இவ் விலாக்கா கமிஷனர் விட்டிருக்கும் அறிக்கையை நீங்கள் கவனித்திருப்பீர்கள். 1937 ஆம் வருடம் பிறப்பதற்கு முன்பாகவே நமது கணக்கு முறைகளில் அவசியமான சீர்திருத்தங்கள் செய்து வைத்துக் கொண்டால் அநாவசியமான வரிகள் கொடுக்கத் தேவை யிராது.

இந்தியாவின் நிலைமைக்கும் பர்மாவின் நிலைமைக்கும் அதிக வித்தியாசத்தைக் கவனியாமலே இந்தியாவில் கொண்டுவரப்படும் ஒவ்வொரு சட்டமும் இங்கு கொண்டுவரப்படுகிறது. சிறப்பாக பர்மா விவசாயக் கடன்களில் பெரும்பாலும் நிலங்களை அபிவிருத்தி செய்வதற்காக வாங்கப்பெற்றவை. இக்கடன்களினல் பர்மியர்களின் செல்வநிலை உயர்ந்திருக்கிறது என்பதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. 1855-ம் வருடத்தில் லோயர்பர்மாவில் பத்து லட்சம் ஏக்கர் நிலங்களில் தான் நெல் வெள்ளாண்மை செய்யப்பெற்றது. 1986ம் வருடத்தில் ஐம்பது லட்சம் ஏக்கர் நிலங்களாயிற்று; இப்பொழுது 1935 முடிவில் ஏறக்குறைய லோயர் பர்மாவில் மாத்திரம் நூறு லட்சம் ஏக்கர் நிலங்களில் நெல் பயிரிடப்படுகிறது. அதாவது கடந்த எண்பது வருடத்திற்குள்ளாக லோயர் பர்மாவில் மாத்திரம் தொண்ணூறு லட்சம் ஏக்கர் நிலங்கள் காடு வெட்டி விளை நிலங்களாக்கப்பெற்றிருக்கின்றன. பொதுமக்கட்கு வேலையும் ஊதியமும் அளிக்கும் இவ்வுரிய வேலையை நிறைவேற்றுவதற்கு பர்மியர்களிடத்தில் பண பலம் அறவே கிடையாது; ஆள் வலிமையும் போதாது. இவ்விரண்டு விஷயங்களிலும் இந்தியர்கள் உதவிக்கு வந்தார்கள். நகரத்தார்களின் பண உதவிகொண்டே இந் நிலங்களெல்லாம் சீர்திருத்தப்பெற்றன. லோயர் பர்மாவிலுள்ள விவசாயக் கடன்கள் பெரும்பாலும் நில அபிவிருத்திக்

(6-ம் பக்கம் பார்க்க)


## நாட்டுக்கோட்டா பாங்கு லிமிடெட்

தேவகோட்டை

கரண்ட் அக்கவுண்ட், சேவிங்ஸ், தவணை டிபாசிட்டுகள், பின்கண்ட வட்டிக்கு ஏற்றுக்கொள்ளப் படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| கரண்ட் அக்கவுண்டு | ரூ. 100-க்கு | வருஷத்திற்கு | ரூ. 2 |
| சேவிங்ஸ் பாங்கு | ரூ. 100-க்கு | வருஷத்திற்கு | ரூ. $3\frac{1}{2}$ |
| 3 மாத சாஸ்வத டிபாசிட்டு | ,, | ,, | ரூ. 3 |
| 6 மாத சாஸ்வத டிபாசிட்டு | ,, | ,, | ரூ. $3\frac{1}{2}$ |
| 9 மாத சாஸ்வத டிபாசிட்டு | ,, | ,, | ரூ. 4 |
| 12 மாத சாஸ்வத டிபாசிட்டு | ,, | ,, | ரூ. $4\frac{1}{2}$ |
| 24 மாத சாஸ்வத டிபாசிட்டு | ,, | ,, | ரூ. 5 |

எல்லாவிதமான பாங்கிங் வேலைகளும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. விபரத்துக்கு நேரில் அல்லது எழுத்து மூலம் தெரிந்துகொள்ளலாம்.

For the Nattukkotta Bank Ltd.,
K. Ramanathan chettiar, B. A.
Managing Director.



## முந்திக்கொள்ளுங்கள்.

பின் இடம் கிடைக்கவில்லை என்று வருத்தப்படாதீர்கள்.

ஸ்ரீ மஹாலெக்ஷிமி கம்பெனியாரின் கெங்காஸாகா ஸ்ரீ காசியாத்ரா ஸ்பெஷல் ரயில் தாது-ஹூ மார்கழி-மீ 13உ பிற்பகல் 1 மணிக்கு காரைக்குடியை விட்டுப் புறப்படுகிறது.

எங்களுக்கு புறப்படுவதற்கு போதுமான டிக்கெட்டுகள் சேர்ந்துவிட்டபடியால் இன்னும் புறப்பட விரும்புகிறவர்கள் சீக்கிரமாகவே டிக்கெட்டுகளை புக் செய்துகொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

3-வது வகுப்பு சார்ஜ் ரூ. 125.

இப்படிக்கு,

ஸ்ரீ மஹாலெக்ஷிமி கம்பெனியார்,

நாகநாதபுரம், காரைக்குடி.



## ஆதங்க நிக்ரஹ மாத்திரைகள்.

தேக அசதி, நரம்புகளின் தளர்ச்சி, மலச்சிக்கல் இவைகளை கண்டித்து தேகத்தை வஜ்ர சரீரமாக்கும்.

32 மாத்திரைகளடங்கிய டப்பி 1-க்கு ரூ. 1—0—0.

இனம்! காம சாஸ்திரம் இனம்!!

ஆதங்கநிக்ரஹ ஔஷதாலயம்,
26, பிராட்வே, மதராஸ்.





ஒருமணி நேரத்தில் வாலிபம்

ரமணவிலாசினி

இரவில் ஒரே ஒரு மாத்திரையை படுக்கைக்குச்செல்லும் ஒரு மணிநேரத்திற்கு முன் சாப்பிடுவதால் இஷ்டப்படி வீரியஸ்தம்பனம் உண்டாகின்றது.

ஒரு டப்பி விலை ரூ. 1—0—0

இனம்! கேட்லாக் இனம்!

மதனமஞ்சரி பார்மஸி,
22, சைனபஜார், மதாரஸ்.

(முன்பக்கத் தொடர்ச்சி)

காக வாங்கப்பெற்றவை. இந்தியக் கடன்களைப்போல கடனாளிகளுக்கு லாபம் தராதவையல்ல.

நில சம்பந்தம்

1930-ஆம் வருடம் வரை யுத்தத்தில் ஏற்பட்ட நிலைமைகளாலும் இதர பல காரணங்களினாலும் நெல்லுக்கு நல்ல விலை கிடைத்து வந்தது. விவசாயிகளும் அவர்களோடு சம்பந்தப்பட்டவர்களும் நல்ல நிலைமையிலிருந்ததாகவே காணப்பெற்றனர். 1930-ஆம் வருடத்திலிருந்து தொடர்ந்து ஐந்து ஆண்டுகள் வரை விலைகள் வீழ்ச்சியுறவே உலக நிலையிலும், சிறப்பாக விவசாயிகளின் நிலைமையிலும் அதிக மாறுதல்கள் ஏற்பட்டன. சொந்த முதலின்றிக் கடன் வாங்கி காடு வெட்டி நிலஞ் சேர்த்த பலர் விளை பொருள்களின் விலை வீழ்ச்சிச் சூறாவளிக் காற்றின் முன் நிற்கக் கூடவில்லை. நெல் விலை வீழ்ச்சியால் நில விலைகளும் வீழ்ச்சியுற்றன. நிலங்களின் ஈட்டின்பேரில் நம்மவர்கள் கடன் கொடுத்திருந்த தொகைக்கு அந்நிலங்களின் விலை மதிப்பு மிகவும் குறைந்துவிட்டது. விவசாயிகள் வாங்கிய கடனை திருப்பித் தருவதற்குக் கூடவில்லை. இந்நிலையில் பலவித சகாயங்கள் செய்து கொடுத்து நிலங்களை நஷ்டத்திற்கு நம்மவர்கள் ஒப்புக்கொள்ள நேரிட்டது. இன்று லோயர் பர்மாவில் நெல் விலை பூமியில் நம்மவர்களிடம் சுமார் இருபத்தைந்து லட்சம் ஏக்கர்களும், உழுது பயிரிடுபவர்களல்லாத இதர நிலச்சுவான்தார்களிடம் இருபத்தைந்து லட்சம் ஏக்கர் நிலங்களும், உழுது பயிரிடுவோர்களிடம் ஐம்பது லட்சம் ஏக்கர் நிலங்களும் இருக்கின்றன என்று சொல்லப்பெறுகிறது. நம்மவர்களுக்கு வரவேண்டிய கடன்கள் பெரும்பாலும் தீர்ந்துவிட்ட படியால் இனி அதிகமாக நம் கைக்கு நிலங்கள் வருவதற்கில்லை. நிலங்களை சாஸ்வதமாக வைத்துக்கொள்வது என்பது நம்முடைய கொள்கையுமல்ல. இப்பொழுதே சிறுகச் சிறுக நம்மவர்கள் கைகளிலிருந்து நிலங்கள் விவசாயிகட்கு விற்கப்பட்டு வருகின்றன. எனினும் கடந்த எண்பது ஆண்டுகளுக்குள்ளாக தொண்ணூறு லட்சம் ஏக்கர் நிலங்கள் பொதுவாக நம்மவர்கள் பண உதவி கொண்டு திருத்தப்பட்டிருப்பதால் நகரத்தார்களிடம் இருபத்தைந்து லட்சம் ஏக்கர் நிலங்கள் வந்திருப்பது கண்டு ஆச்சரியப்படுவதற்கில்லை. அவை நீங்கலாக நகரத்தார்களுடைய பண உதவியால் இந்நாட்டு மக்கட்கு எண்பது வருடங்களுக்குள்ளாக ஏறக்குறைய அறுபத்தைந்து லட்ச ஏக்கர் நிலங்கள் புதிதாக சேர்ந்துள்ளதும், அதனும் அவர்களது பொருள் நிலை உயர்த்தப்பட்டிருப்பதும் வெள்ளிடை மலை.

இதர மாகாணங்களை விட இன்றைய பர்மா விவசாயக் கடன் நிலை மிகவும் திருப்திகரமாயிருக்கிறது என்று கூறலாம்.

விவசாயிகளினுடைய கடன் பெரும்பாலும் தீர்ந்து விட்டது. பங்கோ ஜில்லாவில், பங்கோ தன்னப்பின் கிழக்கு நவுலியப்பண்டவுன் ஷிப்புகளிலுள்ள விவசாயிகளின் கடன் நிலைமைகளைப்பற்றி விசாரிக்கும்படி சர்க்காரால் நியமிக்கப்பெற்ற ஆபீசருடைய ரிப்போர்ட்டிலிருந்து அப்பகுதிகளிலுள்ள விவசாயிகளுக்குச் சொந்தமான நிலங்கள் நூற்றுக்குப்பதினறு வீதமே கடன் பட்டிருக்கின்றன வென்றும், வெண்ணிலைக்கடன் மார்க்கீசுக் கடன் எல்லாம் உள்பட ஏக்கருக்கு 30 ரூபாய்க்கு மேலில்லை யென்றும் அறியக்கிடக்கிறது. லோயர் பர்மாவில்

# கடன் சமரசச் சட்டத்தால் பாதகம் யாருக்கு?

## நகரத்தார் வட்டி குறைவானது

## செட்டியார்கள் கணக்கை சந்தேகிக்கமுடியாது

இதர ஜில்லாக்கள் பலவற்றில் இந்த விகிதாசாரம் இன்னும் குறைவாக யிருக்குமே யொழிய அதிகப்படுவதற்குக் காரணமில்லை. ஆகவே இன்றைய பர்மாவின் விவசாயக்கடன் பிரச்னையைப்பற்றி யாரும் கவலைப்படவோ, பயப்படவோ முகாந்திரமில்லை. மற்றும் கடந்த ஏழு ஆண்டுகளாக விவசாயிகள் கடன் பெறுவதும் குறைந்து கொண்டே வருகிறது. பர்மா ரிஜிஸ்திரேஷன் டிபார்ட்மெண்டு அறிக்கையில் கொடுக்கப்பட்டிருக்கும் புள்ளி விவரங்கள் இதனை நன்கு விளக்குகின்றன. 1929 ஆம் வருடத்தில் 60,465 மார்க்கீஸ் பத்திரங்கள் பிறந்தன; அவைகளின் மதிப்பு 842 லட்ச ரூபாய், 1935 ஆம் வருடத்திலோ 18,051 மார்க்கீஸ் பத்திரங்களுக்குக் குறைந்து விட்டதோடு அவைகளின் மதிப்பும் 109 லட்சத்திற்கு வந்து விட்டன. சென்றவருடத்தில் பிறந்த பத்திரங்களிலும் ஒரு முக்கிய பகுதி பழைய வெண்ணிலைக் கடன்களுக்காகப் போட்டுக் கொடுக்கப்பெற்றவை என்பதும் நீங்கள் அறிவீர்கள். விவசாய கடன் படிப்படியாகக் குறைந்து வந்திருப்பது கவனிக்கத்தக்கது.

| வருடம் | நம்பர் | தொகைமதிப்பு |
|---|---|---|
| 1929 | 60,465 | 842 லட்சம் |
| 1930 | 50,885 | 652 ,, |
| 1931 | 37,982 | 428 ,, |
| 1932 | 28,812 | 245 ,, |
| 1933 | 19,407 | 163 ,, |
| 1934 | 16,512 | 136 ,, |
| 1935 | 18,051 | 109 ,, |

அதே மாதிரி ஆடுமாடுகள், வயலிலுள்ள பயிர்கள், இதர பயிர்கள், அசையும் பொருள்கள் பேரில் கொடுக்கும் கடன்களும் படிப்படியாகக் குறைந்து வந்துவிட்டன.

| வருடம் | நம்பர் | தொகை மதிப்பு |
|---|---|---|
| 1929 | 14,197 | 122 லட்சம் |
| 1930 | 13,543 | 108 ,, |
| 1931 | 10,328 | 72 ,, |
| 1932 | 9,724 | 75 ,, |
| 1933 | 7,264 | 42 ,, |
| 1934 | 6,426 | 44 ,, |
| 1935 | 6,101 | 29 ,, |

பர்மா விவசாயிகள் கடன் சமரசச் சட்டம்

இங்கிலையில் சென்ற ஆகஸ்டு மாதத்தில் பர்மா சட்டசபையில் இந்தியர்களின் தீவிரமான எதிர்ப்புக்கிடையே பர்மா விவசாயிகள் கடன் சமரசச் சட்டம் நிறைவேறியிருப்பது ஓர் துரதிர்ஷ்டமாகும். நம்மவர்களில் பலர் சமரசமாய் விவசாயிகளுக்கு விட்டுக் கொடுத்திருப்பதையே சட்ட பூர்வமாக இச்சட்டம் செய்ய விருக்கிறதென்றாலும், போதிய காரணமில்லாமல் ஒரு மசோதாவைக் கொண்டு வருவது மிகவும் கண்டனத்திற்குரியது. ஒருவாறு இச் சட்டத்திற்கு ஒத்துக் கொண்டாலும்; புதுக் கடன்களையும் இச்சட்டம் பாதிக்க விருப்பது, யாருடைய நன்மைக்காக இச்சட்டம் கொண்டுவரப்படுகிறதோ அவர்களுக்கே தீமையாக முடியும். ஏனெனில் பண உதவி யில்லாமல் இந்நாட்டில் விவசாயம் செய்ய முடியாது. விதை, ஆடு மாடுகள் வாங்குவதற்கும் வயற் கொட்டகை போடுவதற்கும், விவசாய ஆயுதங்கள் செய்வதற்கு கூலிகட்குச் சம்பளம் கொடுப்பதற்கும் அப்போதைக் கப்போது விவசாயிகட்குப் பண உதவி தேவையாயிருக்கிறது. அவ்விதம் உதவி செய்யப்படும் பணமும் மத்தியஸ்தக் கோர்ட்டுக்குக் கொண்டுவரப்பெற்று தீர்த்துக் கொடுக்கப்பெறக் கூடுமென்றிருந்தால் எம் முதலாளியும் பணம் கடன் கொடுக்க முன்வர மாட்டார். மற்றும் விவசாய மந்த காலத்திற்கு முன் ஏற்பட்ட கடனுக்கு மத்தியஸ்தம் செய்து வைக்க வேண்டுமென்பது இச் சட்டத்தின் முக்கிய கருத்தே யொழிய தற்பொழுதைய கடன்களுக்கு மத்தியஸ்தம் தேவையுமில்லை; சட்டத்தின் நோக்கமு மில்லை.

"பழைய கடன்களும் புதிய கடன்களாகப் புதிப்பிக்கப்பட்டுவிடும்; ஆதலால் புதுக் கடன்களை இச் சட்டத்தின் ஆதிக்கத்திலிருந்து நீக்க முடியாது" என்று சட்டசபையில் இச் சட்டத்தைக்கொண்டுவந்தவர், திருவாளர் வெள்ளையன் செட்டியாரவர்களின் திருத்தப் பிரேரேபணைக்குப் பதில் கூறினர். இவ் விவாதம் நியாயமானதல்ல. பழைய கடன்களையும் புதிய கடன்களையும் தெளிவாய்ப் பிரித்துச் சட்டம் செய்வது பிரமாதமான காரியமல்ல.

சென்ற அக்டோபர் மாதம் இருபத்தெட்டாம் தேதி ராஜப்பிரதிநிதி பர்மா விவசாயிகள் கடன் மத்தியஸ்த மசோதாவுக்கு அநுமதி கொடுத்துவிட்டார். அம் மசோதாவும் சட்டமாகிவிட்டது. முதலில் அதனை எங்கு அமுலுக்குக் கொண்டுவருகிறது என்பது சர்க்காரின் ஆலோசனையிலிருந்து வருகிறது. கூடியசீக்கிரம் இரண்டொரு இடங்களிலாவது அது நடைமுறையில் கொண்டு வரப்படும். இந்நிலையில் இனி செய்யக் கூடியது ஒன்றுதானிருக்கிறது. மறுபடியும் பர்மா சட்டசபையில் புனராலோசனை செய்து பர்மா விவசாயிகள் கடன் மத்தியஸ்தச் சட்டம் புதுக் கடன்களைப் பாதிக்காது என்று ஓர் திருத்தச் சட்டம் கொண்டுவந்து நிறைவேற்றிவைக்க வேண்டும். இவ்விதத் திருத்தம் செய்யப்படாவிட்டால் பர்மாவின் விவசாயக் கடன் வசதிகள் மிகவும் பாதிக்கப் பெறுமென்பதை நாம் பலமாக எச்சரிக்க விரும்புகிறோம்.

தற்சமயம் விவசாயிகட்குப் பண உதவி கிடைத்துவரும் மார்க்கங்களில், நகரத்தார்களிடமிருந்து கிடைத்துவருவதுவே வட்டி வாசியில் குறைச்சலாயிருக்கிறது. பலவித சட்டங்கள் கொணர்ந்து நகரத்தார்களின் தொழில்முறைக்குத் தடை ஏற்படுவதால், நாட்டுமக்களுக்கு அதிக தீங்கே ஏற்படும். வர வர நெல் வட்டிக்குப் பிறரிடம் விவசாயிகள் கடன் வாங்குவது அதிகரித்துவருகிறது. போதுமான பண வசதி கிடைக்காததினால் அந்தந்த ஊரிலிருக்கும் மளிகைகளில் மாசூலில் நெல் அளந்துதருவதாக விவசாயிகள் கடன் வாங்க நேருகிறது. இவ்விதம் வாங்கப்பெறும் கடன்களுக்கு நகரத்தார் வாங்கும் வட்டி விகிதத்தைவிட பன்மடங்கு வட்டி விகிதம் கொடுக்கவேண்டியதிருக்கிறது. கிராமங்களில் நெல் வட்டிக்குக் கடன் வாங்குவது அதிகரித்துவருவது போல, பட்டணங்களில் காபூலி லேவாதேவிக்காரர்களிடமும், இதர சில்லரை லேவாதேவிக்காரர்களிடமும் கடன் வாங்கிப் பொதுமக்கள் அவதியுறுகின்றனர். சில நாட்களுக்கு முன்பாக ஜஸ்டிஸ் பிராண்டு அவர்கள் தன்னுடைய தீர்ப்பு ஒன்றில் இவ் விஷயத்தைப்பற்றி பிரஸ்தாபித்திருப்பது கவனிக்கத்தக்கது. வெற்று அண்டிமேன்களில் கையெழுத்து வாங்கிக்கொண்டு அதிகமான தொகையைப் பூர்த்திசெய்வது போன்ற அம்சங்கள் நகரத்தார் தொழில்முறையில் கிடையாது. செட்டியார்களுடைய கணக்கு முறைகள் மிக ஒழுங்காகவும் சத்தியமாகவும் வைக்கப்பெற்றிருக்கின்றன வென்பதை அவர்களோடு பழகிய அனைவரும் அறிவார்கள். அவர்களுடைய கணக்குகளின் ஒழுங்கைக் குறித்து யாரும் குறை கூறுவதற்கு சந்தர்ப்பமில்லாதிருக்கும்பொழுது, பஞ்சாபிலுள்ள "ரெகுலேஷன் ஆப் அக்கவுண்ட்ஸ் ஆக்டை" சென்ற சட்டசபையில் இங்கும் கொண்டுவர முயற்சித்தது மிகவும் வருந்தத்தக்கது. அதிலும் பர்மிய பாஷையிலே ரசீதுகளும் கணக்கு நகல்களும் கொடுக்க வேண்டுமென்று விரும்புவது நடைமுறையில் சாத்தியமான காரியமல்ல. அவ்விதம் செய்யும்படி சட்ட பூர்வமாக கட்டாயப்படுத்துவது, லேவாதேவித் தொழிலில் உள்ள செலவை அதிகரித்து கடைசியில் கடன் வாங்குபர்களே அச் செலவையும் கொடுக்க நேரும்.

இற்கிடையில் இந்நாட்டு மக்களின் செல்வத்தை வளர்த்துவருவது அவசியமாகும். அநாவசியமான செலவுகள் ஒழியவேண்டுமென்று இந்நாட்டு மக்களிடையே பலத்த பிரசாரம் செய்யப்படுதல் வேண்டும். சிறப்பாகக் கூட்டுறவு இயக்கத்தைப் பலப்படுத்த வேண்டும். விவசாயிகளின் கதிமோட்சம் கூட்டுறவு இயக்கத்தில் தானிருக்கிறது. கடன் வாங்குவதற்கே கூட்டுறவு இயக்கத்தை உபயோகிக்காது பொதுமக்களிடையே சிக்கனத்தை உண்டாக்குவதற்கும், அவர்கள் மிச்சத்தை சேகரித்துத் திரட்டுவதற்கும் ஓர் கருவியாயிருத்தல் வேண்டும்.

சிறப்பாக இந்நாட்டிற்குத் தேவையானது கூட்டுறவு நிலமார்ட்கேஜ் பேங்குகள்தான்.

(15-ம் பக்கம் பார்க்க)


ஜோதிஷ சக்ரவர்த்தி
1000000



ஜனங்களுக்கு மேல் நமதுஜோதிஷ பலனைப்பற்றி புகழ்ந்திருக்கின்றனர். கீர்த்திவாய்ந்த 25 தலைமுறை ஜோதிஷ பரம்பரைகத்வார் சமஸ்தானஜோதிஷர். மகாராஜாக்கள், பிரபுக்களிடமிருந்து தங்க மெடல்களும், நற்சாக்ஷிகளும் பெற்றவர். 1 வருஷத்திற்கு மாதவாரி வாரவாரமாய் உண்மை பலன் எழுத ரூ. 2. எதிர்கால 5 கேள்விகளுக்கு விடை எழுத ரூ. 1 ஜாதகம் அல்லது எழுதும் நேரம் தேவை. பண்டிட், N. அபிராவானந்தா, நம். 26. வடக்கு ... மயிலாப்பூர், மதராஸ்.

ஆச்சர்யமான சுவாஸ நிவாரணி




இந்த ஆச்சர்யமான பெப்ச் சுவாச மாத்திரை வாயில் கரைந்து சுவாஸகோஸத்திற்குகந்த தேவதாரு மருந்து காற்று தொண்டையின் வழியாக நேராக சுவாஸகோஸத்திற்கு சென்று சுவாஸகோஸம் மார்பு இவைகளைப் பலப்படுத்துகிறது. மேலும் மார்ச்சளிநோய், சீதளம், சளி, இருமல் இவைகளை சீக்கிரத்தில் குணப்படுத்தி சுவாஸத்தில் தடை யேற்படாமல் செய்கிறது.

ஒவ்வொரு பெப்ச் மாத்திரையும் வெள்ளிப்பூச்சு சுத்தப்பட்டு எல்லா மருந்து வியாபாரிகளும் பாட்டில் 1 ரூ. 1-க்கு விற்கிறார்கள்.

ஏஜண்டுகள்:—மெஸர்ஸ் தாதா அன் கோ., P. T. சென்னை.

: கிருமி நிவாரண பெப்ச் சுவாஸ மாத்திரையை உட்கொள்ளுங்கள்.

பெப்ச் PEPS

சுகத்தைப் பேணி தனத்தைத் தேடுக.
நல்ல குற்றமற்ற சுத்தமான சமையலுக்கு
ருக்மணி குக்கர்
அடுக்கு இணையிலாத துணை
1, 2, 4, 6, 8, 12, 16 பேர்களுக்குரிய ஏழு அளவுகள் முறையே ரூ 9, 12, 16, 21, 26, 32, 38 விலை. விபா புத்தகம் இனம். ருக்மணி குக்கர் கம்பெனி ராயபுரம் 2, சென்னை
ஏஜண்டுகள்:
புதுக்கோட்டை.—சம்பந்தம் அண்டுகோ லிமிடெட், கீழராஜவீதி.
காரைக்குடி:—கே. ஜி. அண்டு கோ.




# எட்டாவது எட்வர்ட் பட்டந்துறந்தார்

## சந்ததிகளுக்கும் பட்டம் இல்லை

## பெயரையும் மாற்றிக்கொண்டார்

## புதிய மன்னர் பட்டமேற்புப் பிரகடனம்

## மிஸ்டர் வின்ஸ்டருக்கு "கோமகன்" பட்டம்

கடந்த சில நாட்களாகக் கொந்தளிப்பில் இருந்த எட்டாம் எட்வர்டு மன்னரின் விவாகப் பிரச்னை 10-ந் தேதியோடு முடிந்து மன்னர் பட்டந்துறந்தார். அவருடைய அறிக்கை லார்டு சபையிலும் பார்லிமெண்டிலும் வாசிக்கப்பட்டது. உலக சரித்திரத்தில் என்றுமில்லாத நிலைமையில் 10உ யன்று காமன்ஸ் சபை கூடியிருந்தது. ஒரே மௌனம் தான் எங்கும் குடிகொண்டிருந்தது. பகல் 2-45 மணிக்குப் பார்லிமெண்டு சபைத் தலைவர் வந்தமர்ந்தார். பிரதம மந்திரி மிஸ்டர் ஸ்டான்லீ பால்டுவின் மாலை 3-35 மணிக்குச் சபைக்கு வந்து மன்னரின் சொந்தக் கையெழுத்துடன் கூடிய அறிக்கையை பார்லிமெண்ட் தலைவரிடம் சமர்ப்பித்துவிட்டு, மிஸ்டர் ராம்ஸே மாக்டொனல்ட் ஸர் ஜான் சைமன் ஆகியவர்களுக்கிடையில் போயமர்ந்தார். அந்த அறிக்கையை பார்லிமெண்ட் சபைத் தலைவர், துக்கம் கலந்த ஆழ்ந்த குரலில் சபையோருக்குப் படித்துக் காட்டினர். அது வருமாறு:—

கவலையுடன் நெடிய ஆலோசனை செய்த பிறகே என் தந்தையார் இறந்த பின் பட்டத்திற்கு வந்த அவர் வாரிஸாகிய நான் சிம்மாதனத்தைத் துறந்துவிடுவதென்று உறுதி கொண்டேன் என்னும் எனது இந்த முடிவானதும் மாற்ற முடியாததுமான தீர்மானத்தை நான் தெரிவிக்கிறேன். இந்தக் காரியம் எவ்வளவு பிரமாதமானதென்பதை நான் உணர்ந்தே இருக்கிறேன். எனினும், நான் முடிவாகச் செய்த தீர்மானத்தையும், இவ்விதத் தீர்மானத்திற்கு வரவேண்டியிருந்த காரணங்களையும் என் பிரஜைகள் அனைவரும் உணர்ந்து ஏற்றுக்கொள்வார்களென்ற நம்பிக்கையுடனிருக்கிறேன். என் மனத்திலுள்ள விஷயங்களை எடுத்துச் சொல்ல இப்போது நான் விரும்பவில்லை. ஆனல் ஒரு விஷயம் மட்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளப்படவேண்டும். ஓர் அரசன் தாங்கவேண்டிய பொறுப்புகள் மிகவும் அதிகமானவை, சுமக்கமுடியாதவை. இப்போது நான் எச்சந்தர்ப்பத்திலிருக்கிறேனே அதிலிருந்து மாறுபட்ட வேறுவிதமான ஸ்திதியில் இருப்போர் தான் அந்தப் பெரிய சுமையைத் தாங்கமுடியும். நான் இனிமேல் என்னுடைய காரியத்தை என்னல் திருப்திகரமாகவும் திறமையுடனும் நிர்வகிக்கமுடியாது என்று உணர்வதாகக் கூறும் போது நான் எப்போதுமே பொதுஜன க்ஷேமத்தையே முன்னணியில் வைத்துக் கொள்ள வேண்டுமென்ற முக்கியமான கடமையை மறந்துவிடவில்லை யென்றே கருதுகிறேன்.

ஆகவே, நான் பின்கண்டவாறு ஒரு ராஜ்யத் துறவு சாஸனத்தை தயாரித்திருக்கிறேன்.

பிரிட்டன், அயர்லாந்து, கடலுக்கப்பாலுள்ள பிரிட்டிஷ் ராஜ்ஜியங்கள் இவற்றின் அரசரும், இந்தியாவின் சக்கரவர்த்தியுமாகிய எட்டாவது எட்வர்ட் என்ற நான், என் சார்பாகவும், என் சந்ததியார் சார்பாகவும் இந்தச் சிம்மாசனத்தைத் துறந்து விடுவதென்று திடசங்கல்பம் செய்து விட்டதை இதன் மூலம் பிரகடனப்படுத்துகிறேன். இந்த ராஜிநாமா சாஸனம் உடனே அமுலுக்கு வரவேண்டுமென்பது என் விருப்பம். அதற்காக இன்று 1936-ம் வருஷத்து டிசம்பர் மாதம் 10-ந் தேதி யன்று இதில் கையெழுத்துச் செய்துள்ள சாட்சிகள் முன்னிலையில், நான் இந்த சாஸனத்தில் கையெழுத்துச் செய்கிறேன்.

(ஒப்பம்) எட்வர்ட் ஆர். ஐ.

இந்த சாஸனத்தில் நான் கையெழுத்திட்டதற்கு என்னுடைய மூன்று சகோதரர்களான யார்க் கோமகனும், கிளவ்ஸ்டர் கோமகனும், கென்ட் கோமகனும் சாட்சிகளாக கையெழுத்துச் செய்துள்ளார்கள். நான் இவ்வாறு ராஜ்யத்தைத் துறக்காமல் வேறுவிதமாக நடந்துகொள்ள வேண்டுமென்று என்னைக் கேட்டுக்கொண்டவர்களின் உணர்ச்சியை நான் பூரணமாக உணர்ந்து பாராட்டுகிறேன். நான் என் மனத்தில் இறுதியாக முடிவு செய்துகொள்ளுமுன் அவர்களுடைய வேண்டுகோளைப் பூரணமாகச் சிந்தனை செய்தேன். ஆனல், என் மனத்தில் இப்போது சிறிதும் சந்தேகமில்லாமலே இறுதியாக முடிவு செய்துள்ளேன்.

ஒரு முடிவுக்கு வருவதில் இன்னம் தாமதமேற்படுத்துவது நான் வேல்ஸ் இளவரசனாக இருந்த காலத்திலும் மன்னரான பிறகும் யாருடைய சந்தோஷத்தையும், நன்மையையும், க்ஷேமத்தையும் என் ஹிருதயத்தின் முக்கிய விருப்பமாகக் கொண்டேனோ அந்தப் பிரஜைகளின் க்ஷேமத்துக்கே தீங்கு செய்வதாகும்.

என் பிரஜைகளிடமிருந்து விடைபெற்றுக்கொள்கிறேன்.

"நான் எடுத்துக்கொண்ட பாதையே, இந்த தேசத்தின் சிம்மாசனம், ஏகாதிபத்தியம், இவற்றின் ஸ்திரத்தன்மைக்கும், என் பிரஜைகளின் க்ஷேமத்துக்கும் சிறந்தது என்று நம்புகிறேன்.

நான் சிம்மாசனத்தில் ஏறுவதற்கு முன்பும், அதற்குப் பிறகும் என் சார்பாக எல்லோரும் காட்டிய அன்பு எவ்வளவு அதிகமானதென்பதை நான் உணர்வேன். இதே மாதிரி பூர்ணமான அன்பு எனக்குப் பின்னல் சிம்மாசனத்தில் ஏறுவோருக்கும் கிடைக்குமென்று நான் அறிவேன்.

என்னுடைய ராஜிநாமா சாஸனம் உடனே அமுலுக்கு வருவதில் எவ்விதத் தாமதமும் இருக்கக்கூடாதென்று நான் கவலை கொள்கிறேன். என் சட்ட பூர்வமான வாரிஸான என் சகோதரர் யார்க் கோமகன் சிம்மாசனம் ஏறுவதற்கான நடவடிக்கைகள் உடனே எடுத்துக்கொள்ளப்படவேண்டும்."

ஆனல் மன்னர் தம்முடிவை மாற்றிக் கொள்ள முடியாதென்று அறிவித்துவிட்டார். மன்னரின் தாய் மேரிராணியார், மூன்று சகோதரர்கள் அத்தையும் மாமனும், இதர பிரபலஸ்தர்கள் அனைவரும் மன்னருக்கு யோசனை கூறியதாகத் தெரிகிறது.

அரசர் அறிக்கை படிக்கப்பட்ட பிறகு, பார்லிமெண்ட் சபையில் மிஸ்டர் ஸ்டான்லீ பால்டுவின் ஓர் உருக்கமான பிரசங்கம் செய்தார். அக்டோபர் 20-ந் தேதியும் மிஸ்டர் பால்டுவின் மன்னரைப் பேட்டி கண்டு கல்யாண விஷயமாய் அமெரிக்கப் பத்திரிகைகளில் வெளி வந்த விஷயங்களைக் கூறியதாகவும், மன்னர் தாம் ஸ்ரீமதி விம்ப்ஸனை மணந்துகொள்ள விரும்புவதாகவும் அவளுக்காகப் பட்டத்தை விட்டுப் போய் விடவும் தயாராயிருப்பதாக அறிவித்ததாகவும் மிஸ்டர் பால்டுவின் கூறினர். நவம்பர் 25உ மன்னர் மிஸ்டர் பால்டுவினை அழைத்து, "ஸ்ரீமதி விம்ப்ஸன் என் மனைவியாயிருக்கட்டும். ராணிப் பதவி அவருக்கு கொடுக்கவேண்டாம். இதற்கேற்றபடி பார்லிமெண்ட் ஒரு சட்டம் இயற்றுமா?" என்று கேட்டதாகவும் அதற்கு, டிசம்பர் 2உ தாம் "மன்னர்யோசனை காரிய சாத்தியமானதல்ல" வென்று கூறிவிட்டதாகவும் மிஸ்டர் பால்டுவின் வெளியிட்டார். மேலும் அவர் கூறியதன் சாரம் வருமாறு;-

"பிரிட்டிஷ் குடியரசு என்பது நிகரற்றதோர் ஸ்தாபனம். அது பல நூற்றாண்டுகளாக இந்நாட்டில் வளர்ச்சியடைந்து வந்திருக்கிறது. பல உரிமைகள் அந்தப்பதவியினின்று பறிக்கப்பட்டிருக்கின்றன. ஆயினும் மொத்தமாக பார்க்குமிடத்து நம்முடைய சரித்திரத்திலேயே எந்தக் காலத்திலும் அது செய்துள்ள வேலையை விட இன்று இன்னம் மகத்தான பொறுப்புக்கள் அதைச் சார்ந்துள்ளன. அதன் அந்தஸ்தும் கௌரவமும் மற்ற எல்லாவற்றையும் விட மிகவும் முக்கியமானவை என்பதைப் பற்றி சந்தேகமே இருக்க முடியாது. சாம்ராஜ்ய நாடுகளை இன்னம் ஒன்றாகப் பிணைத்து வைத்திருக்கும் கடைசி சங்கிலி அது. மற்ற நாடுகளைப் பாதித்து இன்னல்களை விளைவித்து வரும் பல சீர்கேடுகள் இங்கு தலை தூக்காமலிருப்பதற்கு—அந்த அந்தஸ்து நிலை குலையாமலிருக்கும் வரை—அது போதிய என்ற உத்தரவாதமாக இருந்து வருகிறது. அபிப்பிராயம் கொண்டிராதவர்கள் இந்த நாட்டிலேயே கிடையாது."



தேசிய சுகாதார சிசுவாரக் கொண்டாட்டக் கமிட்டித் தலைவரும் சொக்கலிங்கம் சுகாதார நிலைய ஸ்தாபகருமான முனிசிபல் கவுன்சிலர் ஸ்ரீமான் ஆரு. ஆ். ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள்.

### முடிதுறவு மசோதா நிறைவேறியது

பார்லிமெண்டின் இரண்டு சபைகளிலும் பண்டைக்கால சம்பிரதாயங்களை அநுசரித்து கண்யமாக 2½ மணி நேரத்திற்குள் நிறைவேறிவிட்டது. இம் மசோதாவுக்கு மன்னர் அங்கீகாரமளித்துவிட்டார். இச் செய்தி பகல் 1-50க்கு வெளியிடப்பட்டது. இத்துடன் எட்டாவது எட்வர்டு மன்னர் பதவியினின்றும் நீங்கி அவரது சகோதரர் யார்க்கோமகன் அப்பதவியை ஏற்றுக்கொண்டார். எட்வர்டு மன்னர் முடிதாங்கிய 325 நாட்களுக்குப் பின்னர்—தமக்கு அந்த சொற்ப காலத்தில் சேவை புரிந்த சிப்பந்திகளுடன் பேசிக்கொண்டிருந்தார்.

மன்னர் தமது பதவியைத் துறந்தபொழுதே தமக்களிக்கப்பட்ட எல்லாப் பட்டங்களையும் துறந்துவிட்டார். இனி அவர் மிஸ்டர் வின்ஸ்டர்என்றே அழைக்கப்படுவாராம்.

### முடியைத் துறந்தேன்

மாஜி மன்னர் எட்டாவது எட்வர்டு வின்ஸ்டர் கோட்டையிலிருந்து சாம்ராஜ்ய மக்களுக்கு ரேடியோ மூலம் விடுத்த செய்தி:—

புதிய மன்னர் மாட்சிமை தங்கிய ஆறுவது ஜார்ஜிடம் தான் முழு விசுவாசத்துடன் நடந்துகொள்வதாக முதலில் கூறிவிட்டு மேலும் கூறியதாவது:—

"நான் சிங்காதனத்தை துறக்கவேண்டி ஏற்பட்டதன் காரணங்கள் நீங்களெல்லோரும் அறிந்ததே. ஆனல் அந்த முடிவுக்கு வரும்போது நான் 25 வருட காலமாக வேல்ஸ் இளவாசனகவும், மன்னனகவும் சேவை செய்ய முயற்சித்து வந்த இந்நாட்டையும் மறக்கவில்லை யென்பதை நீங்கள் உணரவேண்டும். நான் காதலிக்கும் ஸ்திரீயின் உதவியும், ஆதரவும் இல்லாமல் என் விருப்பப்படி ராஜ்ய பாரத்தை வகித்து, பொறுப்பு நிறைந்துள்ள கடமைகளைச் செய்வது சாத்திய மற்ற விஷயம் என்பதை நான் உணர்ந்துவிட்டேன். இதை நீங்கள் நம்பவேண்டுமென்றுதான் கேட்டுக்கொள்கிறேன்."

### எங்கு சென்றார்?

கடற்படை இலாகாவுக்குச் சொந்தமான "என்சான்டிரஸ்" என்ற கப்பலில் மாஜி மன்னர் போர்ட்ஸ்மவுத்திலிருந்து பிரயாணமாகிவிட்டார் என்று ஒரு செய்தி கூறுகிறது. எங்கு செல்கிறார் என்பது நிச்சயமாகத் தெரியவில்லை.

### ஆருவது சார்ஜ் மன்னர் பட்டமேற்பு

ஆருவது ஜார்ஜ் மன்னரெனப் பிரகடனம் செய்யும் பொருட்டு பிரிவிக்கவுன்சில் கூடியது. அங்கத்தினர்களில் பெரும்பாலோரும், குடியேற்ற நாட்டு ஹை கமிஷனர்களும் விஜயம் செய்திருந்தனர். சபையோர் ராஜ விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டனர். சம்பிரதாயப்படி புதிய மன்னர் ஆருவது ஜார்ஜ் (பிரகடனம்) முதல் தடவையாக பேசினர். பட்டம் துறந்த தம் சகோதரருக்கு கோமகன் பட்டமளிப்பதாகக் கூறினர். இனி மாஜி மன்னராகிய எட்வர்டு "மகிமை தங்கிய வின்ஸர் கோமகன்" என அழைக்கப்பட வேண்டும்.

புதிய மன்னர் ஆருவது ஜார்ஜ் சிம்மாசனம் ஏறிய பிரகடனம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் எல்லா பாகங்களிலும் படிக்கப்பட்டு ராஜவிசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்ளப்பட்டது.

### மகுடாபிஷேகம்

ஆருவது ஜார்ஜ் மன்னரின் மகுடாபிஷேகம் அடுத்த மே மீ 12உ நடைபெற மன்னர் சம்மதித்துவிட்டார் என்று சொல்லப்படுகிறது. (இதே தேதியில் தான் மாஜி மன்னருக்கும் மகுடாபிஷேகம் நடத்துவதாக இருந்தது)

## கருணையுள்ள தீர்மானம்

லெ. கருப்பஞ் செட்டியார், பைஞ்சலோ

இன்று நம் தனவணிக சமூகத்தில் பதியை இழந்து பரிதவிக்கும் பால்ய விதவைகளின் எண்ணிக்கை மிகப்பல, அவர்களின் "விதவை" க் கோலத்தை விரித்தெழுதுவதற்கு எமது எழுதுகோல் வசதியளிக்க மறுக்கிறது.

பெரியோர்களே, எப்பிறப் பினும் (ஆறறிவுற்ற) மானிடப் பிறவியே மேன்மை பெற்றதென நாம் யாவரும் பறைசாற்றிக் கொள்ளுகிறோம். உண்மையே ஆனால், இதில் ஆடவர்க்கு ஓர் விதியும் பெண்கட்கு ஓர்விதியும் செய்து வருவது நீதியாகுமா? ஆடவர் பெண்டிற்குள் (உடலில் தவிர) எவ்வித ஏற்றத் தாழ்வான வேற்றுமையும் காண்பதற்கில்லையென்பதை எவரும் மறுப்பதற்கில்லையே. அங்ஙனமிருக்க ஆடவர் பெண்டிரை அநீதியாக அடிமைப்படுத்தி அவர்கள் வாழ்நாளில் "விதவை" என்ற முட்டுக்கட்டையை இடையே புகுத்தி அவர்களை ஆயுள் பரியந்தம் கருணையற்ற கடலில்வீழ்த்திக் கரையேறும் வழியை அடைத்துவிட்டனர்கள்.

எச்சமூகமும் கால நிலையிலிருந்து அவ்வக்காலத்திற்கேற்க பழக்க வழக்கங்களைத் திருத்திக்கொள்ள வேண்டிய தவசியமாகும். அதை அறிந்த நமது தனவணிகச் சமூகத்தாரும் தாது-ஹு கார்த்திகைத் திங்கள் 15-ம் நாள் இரங்கூன் பசுமந்தானில் அகில பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் மகாநாடு கூடி அதில் (சிறப்பாக) கீழ்க்கண்ட தீர்மானம் ஏகமனதாகத் தீர்மானிக்கப்பெற்றது:—

செட்டியார் சமூகத்தில் புருஷர்களை இழந்த பெண்கள் இஷ்டமிருந்தால் உடையணிகளை மாற்ற வேண்டியதில்லையென்றும் செட்டியார் சமூகத்தில் துணைவியர்கள் அல்லாத ஆடவர்களைப் பெரியோர்களின் அனுமதியின் பேரில் மணந்துகொள்ளலாமென்றும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

அன்பர்களே

மேற்கண்ட தீர்மானத்தை யாவரும் பின்பற்றி பால்ய விதவைச் சகோதரிகளின் பரிதாபகரமான கண்ணீர் நொடிய இரத்தக் கண்ணீர், நமது வாள் போன்ற இரத்தக் கண்ணீர் நமது குலக் கேடாயிருக்கும் மாசுள்ள கண்ணீர்—அந்தோ! அக்கண்ணீரைப் போக்கி ஆனந்தம் அன்பு யாவரும் விரும்பும் அவ்வானந்தக் கண்ணீரைப் பெருக்கெடுக்கச் செய்யுங்கள். இதற்கு எச்சகோதரி—யான்—யான் என்று முன்னணியில் வருவரோ. வந்து "விதவை"—"விதந்து" என்ற நாமத்தை விலக்கி துணைவியிழந்த ஆடவரை மணப்பரோ—மணந்து அவ்வாழ்க்கையினின்று காமழு—நறுமணத்தை நாடெங்கும் (விதவையுள்ள எங்கும்) பரவச் செய்வரோ? அச்சகோதரிக்கு என் மனப்பூர்வமான நன்றியறிதலை அன்புடன் பலபடத் தெரிவித்துக் கொள்வேன். கொள்ளுகின்றேன்.

---

## சென்னை சட்டசபைத் தேர்தல்

திரு. மாரிமுத்து தெரிந்தெடுக்கப்பட்டார்

தஞ்சை, டிச. 11—

ஷெட்யூல்ட் வகுப்பினர் பிரதம தேர்தலில் பட்டுக்கோட்டை சர்க்கிளுக்கு அபேக்ஷகராக நின்ற திரு. மாரிமுத்துவின் நியமனச்சீட்டை பரிசோதனை செய்த தேர்தல் அதிகாரி அவருக்குப் போட்டியில்லாமையால் அவரே சென்னை மாகாண சட்டசபையின் அங்கத்தினராகத் தெரிந்தெடுக்கப்பட்டதாக அறிவித்தார். போட்டியின்றி சென்னை சட்டசபைக்கு முதல் முதல் தெரிந்தெடுக்கப்பட்ட காங்கிரஸ்வாதி இவர்தான்.

## ஒரு ஜீவனும்ச வழக்கு

### தேவகோட்டை கோர்ட்டில் தீர்ப்பு

சிவகெங்கைத் தாலூகாவைச்சேர்ந்த வில்லிப்பட்டி கிராமத்திலுள்ள லெக்ஷ்மி அம்பலகாரென்ற தனவந்தர் மீது ஷ்டியூர் ஆதியம்மாள் என்ற வலைய ஜாதிப் பெண் தமக்கும் தம் மகளுக்கும் ஜீவனும்சமளிக்க உத்திரவாகும்படி போட்ட மனுவில் நேற்றுதினம் தேவகோட்டை கனம் ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் அவர்கள் தீர்ப்பளித்தனர்.

மனுதாரின் வழக்கு:—12 வருடங்களுக்கு முன்பு மனுதார் ஆதியம்மாள் லெக்ஷ்மி அம்பலகாரருக்கு மணம் செய்விக்கப்பட்டு அன்னாருக்கும் மனுதாருக்கும் தற்பொழுது 8 வயதுள்ள பெண் இருக்கிறது. சென்ற வருஷம் வரை சதிபதிகள் ஒற்றுமையாக வாழ்ந்துவந்தனர். அப்பால் இருவருக்கும் மனஸ்தாபமேற்பட்டு எதிர் மனுதார் ஆதியம்மாளை தம் வீட்டினின்று தாத்திவிட்டு அவளைக்கவனியாமலேயிருந்து வந்தார். எனவே மனுதார் தன் சம்ரட்சணைக்காகவும் தன் குழந்தை சம்ரக்ஷணைக்காகவும் பிரதிமாதம் ரூ. 75 வீதம் எதிர் மனுதார் தமக்குக் கொடுக்க வேண்டுமென்று பிரஸ்தாப மனு தாக்கல் செய்தார்.

இவ்வழக்கு சுமார் 8 மாதங்களாக விசாரணை நடத்தப்பட்டது. எதிர் மனுதார் தரப்பில், மனுதாரின் விபசாரித்தனம், மனுதார் தள்ளிவைக்கப்பட்டது ஆகிய விஷயங்களை ருஜு செய்ய பல சாக்ஷிகள் விசாரிக்கப்பட்ட பின்னர் வழக்கு ஆர்க்யுமெண்டிற்காக 3-11-36 தேதிக்கு வாயிதா போடப்பட்டிருந்தது. அன்னுதினம் மனுதார் கோர்ட்டில் ஆஜராகாததை உத்தேசித்து எதிர் மனுதார் வக்கீல், மனுதார் ஐந்துமாதம் கர்ப்பவதியாயிருப்பதாக தம் கக்ஷிக்காரிடமிருந்து தமக்குத் தகவல் கிடைத்திருப்பதால், மனுதாரை வைத்தியப் பரிசோதனை செய்வதன் மூலம் மனுதார் மீது சுமத்தப்பட்டுள்ள தாவா விபசாரித்தனம் ருஜுவாகிவிடுமென்றும் அதுவே மனுதாரின் பாத்தியதையை நிராகரிக்கப் போதுமானதென்றும் கூறினர்.

பின்னர் மனுதாரைக் கோர்ட்டில் ஆஜராகும்படி உத்தரவு பிறப்பிக்கப்பட்டது, ஆனால் மனுதார் ஆஜராகி வைத்தியப் பரிசோதனைக்கு சம்மதிக்க மறுக்கவே கனம் மாஜிஸ்ட்ரேட் அவர்கள் இருதரப்பு வாதங்களையும் கேட்டு அடியிற்கண்டவாறு தீர்ப்பளித்தனர்.

மனுதாரின் மீது சுமத்தப்பட்ட தாவா விபசாரித்தனம் திருப்திகரமாக ருஜுவாகவில்லையென்றும், மனுதார் தள்ளிவைக்கப்பட்டதற்கு ஆதாரமாக யாதொரு தஸ்தாவேஜுமில்லாமல்ஷை தள்ளிவைப்பு விஷயம் ஒப்புக்கொள்ளப்படமுடியாதென்றும், எதிர் மனுதார் மனுதாரை புறக்கணித்து வந்திருக்கிறாரென்பதை ருஜுச் செய்ய மனுதாரின் சாக்ஷியமே போதுமென்றும் உத்திரவில் கூறப்பட்டிருக்கின்றன. முடிவில் கனம் மாஜிஸ்ட்ரேட் அவர்கள், மனுதாருக்கு ரூ. 15-ம் மனுதார் மகளுக்கு ரூ. 5-ம் பிரதிமாதம் ஜீவனும்சம் எதிர் மனுதார் கொடுக்கும்படி உத்திரவளித்தார்கள்.

---

## தனிப்பட்டவர்களுடைய கோயில்களில் பிரவேச உரிமை

திருவனந்தபுரம், டிச. 3—

திருவாங்கூரில் தனிப்பட்ட நபர்களுக்குச் சொந்தமான கோயில்களினும், ஹரிஜனங்கள் செல்வதற்கு உரிமை அளிக்கப்படுவதாக செய்தி கிடைத்திருக்கிறது. எண்ணைக்காடு, குட்டநாடு இவற்றிலுள்ள தனிப்பட்ட நபர்களது கோயில்களில் ஹரிஜனங்கள் பிரவேசிக்க உரிமை அளிக்கப்பட்டிருக்கிறதாம்.


# கார்டியன் ஆப் இந்தியாவின்

## சிறந்த பாதுகாப்பளிக்கும் பத்திரங்கள்

பாதுகாப்புள்ள பத்திரங்களின் உறுதியில்லாத ஏற்றத் தாழ்வான விலை மதிப்பும், நிலங்கள் முதலிய இதர இடங்களில் சேமிப்புத் தொகையை டிபாசிட் செய்வதில், போடும் முதல் குறைந்து போகாதபடிக்கும், இன்வெஸ்ட் செய்பவருக்கு நல்ல லாபத்தை அளிக்கக்கூடியதுமான ஒரு சிறந்த சேம நிதி முறை ஏற்படுத்த வேண்டிய தேவை ஏற்பட்டிருக்கிறது.

அப்படிப்பட்ட லாபத்தை அளிக்கு முறையைக் கருதுபவருக்கு "கார்டியன் ஆப் இந்தியா"வின் பாதுகாப்புள்ள சேம நிதி பாலிஸியானது அதனை உண்டாக்கும்.

இந்தப் பத்திரங்களில் தங்கள் சேமநிதியைப் போட்டு வைப்பதால் தங்கள் முதல் குறையாது விருத்தியடையும். இந்த வகையில் வருஷ ஒன்றுக்கு ரூ.100க்கு கிடைக்கும் லாபங்களின்படி 4.1% முதல் 6%வரை லாபப் பிரிவினை கிடைக்கும். அதன் உண்மையென்னவெனில் இன்ஷூரன்ஸ் பாலிஸி திட்டத்தின்படி வருமானவரியிலிருந்து நீக்கப்பட்டிருக்கிறது.

இதன் விபரத்தை விரும்புவோர் கீழ்க்கண்ட தலைமை ஆபீஸிலாவது அதன் கிளைகளிலாவது பெற்றுக் கொள்ளலாம்.

கொயிலோன் பாங்க் லிமிடெட்.,

திருவாங்கூர் நாஷனல் பாங்க் லிமிடெட்.,

**கார்டியன் ஆப் இந்தியா**

**இன்ஷூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.,**

தலைமை ஆபீஸ் : "கலீல் பில்டிங்ஸ்"

119-20, அரண்மனைக்காரன் தெரு, சென்னை.






சுகமாய் தூங்க! அமைதியாய் படிக்க!!

கொசுக்களைக் கொல்லும்

"பாம்பு" மார்க்கு கொசு ஸம்ஹாரி.

மொத்த ஏஜண்டுகள்:—

தி யுனிவர்சல் டிரேடிங் கம்பெனி,
36, வெங்கிடாசல முதலி தெருவு,
பி. டி. மதராஸ்.

(ஜில்லா ஏஜண்டுகள் தேவை.)



## அமிர்தவல்லி மாலை.

அழகிய அம்மானைப்பாடலில் அமைந்தது.
பெரிய எழுத்து.

7 அணு தபால் ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளவும்.
சொற்ப பிரதிகளே கைவசமிருக்கின்றன.

மானேஜர், குமரன், காரைக்குடி.




## செய்கோன் செய்திகள்

### சங்கக் கூட்டங்கள்

28—11—36ந் தேதி மாலை 7 மணிக்கு இந்தோ சைனு நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கத்து ஆறுவது ஆண்டு இரண்டாவது ஸ்பெஷல் பொதுக் கூட்டம் திரு. பழ. கும. குமரப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் கூடியது. அதற்கு 25 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர். சங்கத்துக்குப் புதிதாகத் தயாரிக்கப் பெற்ற விதிகள் சில திருத்தங்களுடன் அங்கீகரிக்கப் பெற்றன. 30—11—36உ மாலை 3-மணிக்கு ஆறுவது ஆண்டு ஐந்தாவது ஸ்பெஷல் நிர்வாகசபைக் கூட்டம் திரு. அ. உ. இராமசாமி செட்டியார் அவர்கள் தலைமையில் 12 மெம்பர்களுடன் கூடியது. திரு. பழ. கும. குமரப்ப செட்டியார் அவர்கள் தாய் நாடு செல்லுவதை முன்னிட்டு சங்கத்து தலைமை பதவியை ராஜீநாமா செய்து கொண்டதை ஏற்று, சங்கத்துப் புதிய தலைவராக ஏகமனதாய் திரு. அ. உ. இராமசாமி செட்டியார் அவர்களைத் தேர்ந்தெடுக்கப்பெற்றது.

### தேநீர் விருந்து

இந்தோ சைனு நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கத்து மாஜி தலைவர்கள் திரு. நா. மா. அழகப்ப செட்டியார் அவர்களும், திரு பழ. கும. குமரப்ப செட்டியார் அவர்களும் 6—12—36-ல் மர்ஷல் ஷோபர் கப்பலில் தாய்நாடு செல்வதால், அன்னாரவர்களுக்கு 4—12—36ந் தேதி மாலை 4-மணிக்கு சங்க நிலையத்தில் சங்க சார்பாக தலைவர் திரு. அ. உ. இராமசாமி செட்டியார் அவர்கள் தலைமையில் ஓர் தேநீர் விருந்து அளிக்கப்பெற்றது. அச்சமயம் காரியதரிசி திரு. பெரி. அழ. மு. மு. நடேசன் செட்டியார் அவர்கள், இரு மாஜி தலைவர்களும் சங்க முன்னேற்றத்திற்கு உழைத்தமைக்கு வெகுவாய் பாராட்டி, இருவர்களுக்கும் பிரிவுபசாரப் பத்திரங்கள் வாசித்தளிக்கப் பெற்று, திரு. அ. மெ. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்களால் கரகோஷத்தினிடையே மலர் மாலை அணிவிக்கப் பெற்றது.

பிறகு, திரு. நா. மா. அழகப்ப செட்டியார் அவர்கள் அவ்வுபசாரப்பத்திரத்திற்கு பதில் கூறினர்கள். திரு. பழ. கும. குமரப்ப செட்டியார் அவர்கள் தனக்கு உபசாரம் செய்தமைக்கு தான் நன்றி செலுத்துவதாகவும், அதில் கூறிய அரிய செயல்களை தான் ஒன்றும் செய்து விடவில்லையென்றும், தன்பேரிலுள்ள அன்பின் காரணமாக உபசாரம் செய்தமைக்கு வந்தனம் செலுத்துவதாகவும், தான் செய்த பணிகளுக்கு அவருடன் ஒத்துழைத்த அங்கத்தினர் அனைவர்கட்கும் தனது வந்தனத்தைச் செலுத்தி, தனது பிரயாணத்துக்கு விடைபெற்றுக் கொண்டு அமர்ந்தார். பிறகு தேநீர்விருந்து நடந்தபின் புகைப்படம் எடுக்கப்பெற்றது. அதன் பின் காரியதரிசி அவர்களால் வந்தனங்கூறப் பெற்று கூட்டம் இனிது நிறைவெய்தியது.

---

## விவேகானந்தர் சங்கம்

### காரைக்குடி

காரம் (Carrom)டபிள்ஸ் டோர்ணமெண்ட் அறிக்கை:—

இந்த டோர்ணமெண்டில் காரைக்குடி முனிசிபல் எல்கைக்குள்பட்ட யாவரும் கலந்து கொள்ளலாம். இதில் சேரவிரும்பும் ஒவ்வொரு ஜதையும் பிரவேசக் கட்டணம் ரூ 0-8-0 நாளது ஹு மார்கழிமீ 6உ பகல் 12 மணிக்குள் அனுப்ப வேண்டும். அவ்வமயம் வந்திருப்பவர்கள் முன்னிலையில் பாலட் குலுக்கப்படும். 21-12-36உ விளையாட்டு ஆரம்பிக்கப்படும். முடிவாக ஜெயிப்பவர்களுக்கு வெள்ளிக்கப்பும், தோற்பவர்களுக்கு வெள்ளி மெடலும் பரிசளிக்கப்படும்.

இந்த டோர்ணமெண்டில் டோர்ணமெண்ட் கமிட்டியாரின் தீர்ப்பே முடிவானது.

## ஆரம்பப் பள்ளிக்கூடங்கள்

### இருக்கும் நிலைபற்றி சர்க்கார் அறிக்கை

சென்னை, டிச. 9

சென்னை சர்க்கார், ஆரம்பக் கல்வி சீர்திருத்த விஷயமாக விடுத்திருக்கும் அறிக்கையின் சாரம் பின்வருமாறு:—

கல்வியைப் பரப்பி வரும் ஆரம்ப பாடசாலைகளை சில மாதங்களாக சர்க்கார் பரிசீலனை செய்து வந்தார்கள். அதன் பயனாக சில விஷயங்கள் தெரிய வந்தன. அனேக பள்ளிக்கூடங்கள் பொருளாதார சீர் குலைந்தும், திறமையில்லாதவைகளாகவும், வேண்டப்படாதவைகளாகவும் இருப்பது தெரியவந்தது. வெகு நாட்களாக இருந்துவரும் பெரும்பான்மையான பள்ளிக்கூடங்களில் அறியாமையைப் போக்குவதற்குத் தேவையான சிரத்தை எடுத்துக் கொண்டிருப்பதாகவே தெரியவில்லை. அனேக பள்ளிக்கூடங்களில் ஆரம்பக் கல்வியை போதிக்கும் எல்லா வகுப்புகளும் இல்லாமலிருப்பதால் இங்கு படித்து வெளியேறும் மாணவர்கள் கல்வியின் பயனைப் பெறாதவர்களாகி விடுகிறார்கள். மொத்தமுள்ள 42600 ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் 7,260 பள்ளிக்கூடங்களில் தான் முதல் 5 வகுப்புகளும் உள்ளன. 8300 பள்ளிக்கூடங்களில் 1 முதல் 3-வது வகுப்பு வரைதான் இருந்து வருகிறது. 18600க்கு ஒரு பள்ளிக்கூடத்திற்கு ஒரே ஒரு உபாத்தியாயரே இருந்து வருகிறார். 12,000 பள்ளிக்கூடங்களில் 30 பிள்ளைகளுக்கு மேல் இல்லை. இந்த நிலைமையால் பெரும்பான்மையானவர்கள் போதிய கல்வியறிவு பெறாமலேயே பள்ளிக்கூடத்திலிருந்து வெளியேறி விடுகின்றனர்.

### படித்த மாணவர்கள்

1930-31 லிருந்து 1934-35 வரை உள்ள புள்ளி விவரங்களைப் பார்த்தால் முதல் வகுப்பில் 1,165,000 மாணவர்கள் படிக்க ஆரம்பித்தவர்களில் கடைசி வருஷம் 5-வது வகுப்பில் 10,1000 மாணவர்களே யிருந்தனர் என்றும் 700,000 மாணவர்கள் முதல் வகுப்பிலிருந்து 2-வது வகுப்பிற்கு வந்துசேரவில்லை என்றும் தெரியவருகிறது. ஆரம்பக் கல்வியை கற்றுத் துடித்துவிடக் கூடிய வயதிற்கு மேற்பட்ட 500000 மாணவர்கள் ஆரம்பக் கல்வி கற்க மிகவும் தாமதமாக ஆரம்பித்திருப்பதும் தெரியவருகிறது.

இவைகளிலிருந்து பொதுப்பணம் பலனில்லாமல் செலவழிக்கப்படுகிறது என்று தெரியவருகிறது. ஆகவே பலனில்லாமல் செலவழிப்பதை தடை செய்ய சர்க்கார் சில முறைகளை ஏற்படுத்தவே ஆரம்ப கல்வி ஆக்ட் சட்டத்தை திருத்தம் செய்திருக்கிறார்கள்.

## ராமனுதபுரம் ஜில்லாபோர்டு

### சர்க்காரின் பிரிவினை உத்தரவு

ராமனுதபுரம் ஜில்லா போர்டு பிரிவினை குறித்து கவர்ன்மெண்டு உத்தரவில் கண்டிருப்பதாவது:—

#### திருப்பத்தூர் போர்டு

திருப்பத்தூர், சிவகங்கை, திருவாடானை தாலூகாக்களும் சிவகங்கை ஜமீனுக்குச் சொந்தமான கிராமங்களைக் கொண்ட பரமக்குடி தாலூகாவின் வடக்கு பாகமும் வடராமனுதபுரம் ஜில்லாபோர்டைச் சேரும்.

சாத்தூர், ஸ்ரீவில்லிபுத்தூர், அருப்புக்கோட்டை, முதுகுளத்தூர், ராமநாதபுரம் தாலூகாக்களும் ராமநாதபுரம் ஜமீனுக்குச் சொந்தமான கிராமங்களை கொண்ட பரமக்குடி தாலூகாவின் தென்பாகமும் வடராமநாதபுரம் ஜில்லாபோர்டைச் சேரும்.

இப்பிரிவினை டிசம்பர் 20 பிற்பகலிலிருந்து அமுலுக்கு வரும். இவ்விரு ஜில்லா போர்டுகளுக்கும் தலைவர் தேர்தல் நடைபெறும் வரை இவற்றின் அதிகாரத்தை ராமநாதபுரம் ஜில்லாக் கலெக்டர் ஏற்றுக்கொள்வார். புதிய ஜில்லா போர்டுகளின் தலைவர் தேர்தலை கலெக்டர் கூடியசீக்கிரம் நடத்துவார். அவசியமானல் கலெக்டர் இப்போர்டுகளின் பேரில் தமக்கு இருக்கும் அதிகாரத்தை ரிவின்யூ டிவிஷன் ஆபீசர்களுக்குக் கொடுக்கலாம்.

பழைய போர்டின் கையிருப்புப் பணம் புதிய இரு போர்டுகளுக்கும் சரிபாகமாகப் பிரித்துவைக்கப்படும். புதிய போர்டுகளின் தலைவர்களைக்கலந்து வரவு செலவுக் கணக்கு விபரத்தைக் கவர்ன்மெண்டாருக்கு ஸ்தல ஸ்தாபன இன்ஸ்பெக்டர் பிறகு தெரிவிப்பார்.



அகிலபர்மா நாட்டுக்கோடைச் செட்டியார்கள் மகாநாட்டின் வரவேற்புக் கழகத்தலைவரான திரு. சா. ராம. மு. சித. மு. நாச்சியப்ப செட்டியாரவர்கள்.

---

## டெல்லி சட்டசபை

டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் அவர்கள் ராஜீநாமாச் செய்த ஸ்தானத்திற்கு ஜனவரி 19உக்குள் தேர்தல் நடத்துமாறு வைஸிராய் உத்தாவிட்டிருக்கிறார்.

## சென்னை—கொழும்பு

### விமானத் தபால்

சென்னைக்கும் கொழும்புக்கும் விமானத் தபால் போக்குவரத்திற்கு ஏற்பாடாயிருக்கிறது. இந்த தபால் விமானம் 23-12-36உ சென்னையிலிருந்து காலை 10 மணிக்குப் புறப்பட்டு கொழும்புக்கு மாலை 4 மணிக்குப் போய்ச்சேரும். பிறகு 24உ கொழும்பைவிட்டுப் புறப்பட்டு சென்னைக்கு பகல் 1-45 மணிக்கு வந்து சேரும்.

இந்த விமானத்தில் சென்னைக்கும் திருச்சிக்கும் அனுப்பப்படும் தபால்கள் உள்ளூர் விமானத் தபாலுக்குக் கட்டவேண்டிய விகிதத்திலேயே ஒப்புக்கொள்ளப்படும். சிலோனுக்குப்போகும் கடிதங்களுக்கும், கவர்களுக்கும், தோலாவுக்கு 3-அணுவும் கார்டுகளுக்கு 1-அணுவும் கொடுக்கப்படவேண்டும். விமான தபால் கட்டணத்துடன் முன்னதாகவே கொடுக்கவேண்டும். அதாவது சாதாரணமாக கார்டுவில, கவர்விலை தவிர, விமானத் தபாலுக்காக கார்டுக்கு 1-அணுவும் கவருக்கு தோலாவுக்கு 3-அணுவும் கொடுக்க வேண்டும்.

---

## காரைக்குடி திருமுறைத் திருவிழா

இந்நகர் நகரச்சிவாலயத்தில் நாளிது தாது-ஹு கார்த்திகை-மீ 22உ சோமவாரம் காலை ஸ்ரீமீனுக்ஷி சுந்தரேஸ்வரருக்கும் ஸ்ரீசமயாச்சாரிய சுவாமிகள் நால்வருக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் செய்வித்து இரவு பன்னிரு சைவத் திருமுறைகளையும் மஞ்சத்தில் அலங்கார ஆராதனைகள் செய்வித்து வேதபாராயணம் தேவார பாராயணம் மேளவாத்திய முழக்கத்தோடு திருவுலாச்செய்வித்து (20) வது முறை ஆரம்பம் செய்யப்பெற்றது. இவ்வரிய கைங்கரியத்தைப் பல ஆண்டுகளாய் ஸ்ரீமான் பி. அ. குடும்பத்தாரவர்களால் நடாத்தி வருகின்றமையால் அக்குடும்பத்தாரவர்கட்கு எல்லாம் வல்ல இறைவன் இன்னருள் புரியுமாறு வேண்டுகிறோம், என்று அ. நடேசதேசிகர் எழுதுகிறார்.

---

## நகரத்தார்களும் கோயில்களும்

இந்தியா புராதன சிலாசாசன ஆராய்ச்சி இலாகா டைரெக்டர் ஜெனரல் சமீபத்தில் விடுத்திருக்கும் அறிக்கையொன்றில் பின் வரும் விஷயம் குறிப்பிடப்பட்டிருக்கிறது:—

நமது ஜில்லாக்களில் முக்கியமாய் நாட்டுக்கோட்டை செட்டியார் ஜாதியாரின் தப்பு வழியான பக்தியினுல் கோவில்களில் நாசகாமான காரியம் நடைபெற்றுவந்திருக்கிறது. அவர்களிடம் புராதனக் கோவில்களை இடித்து அதிக திரவியச் செலவில் கோவில்களைப் புதிதாய்க் கட்டும் வழக்கம் உண்டு. அவர்கள் கோவில்களை இவ்வாறு புதுப்பிக்கும் காலத்தில் பழைய சாசனங்கள் இருக்கும் கற்களை உளியால் அடித்துப் புதுப்பித்தோ அல்லது அவைகளை அஸ்திவாரங்களிலும், சுவர்களிலும் உள்ளே வைத்துக் கட்டியோ புராதன சரித்திர ஆராய்ச்சிக்கு மிகவும் கஷ்டத்தை உண்டு பண்ணி விடுகிறார்கள். இதைச் சீர்திருத்தும் பொருட்டு நகரத்தார் நல்லறிவிற்கும் மனச் சாட்சிக்கும் எட்டுமாறு சென்னையிலிருக்கும் அவர்கள் சங்கத்தின் மூலமாகவும், ஆலய அதிகாரிகள் மூலமாகவும், சென்னை ஹிந்து மத தர்ம பரிபாலன போர்டார் மூலமாகவும், புராதன சிலாசாசன ஆராய்ச்சி இலாகாவின் சம்மதமின்றி பழைய ஆலயங்களைப் புதுப்பிக்கக் கூடாது என்று ஏற்பாடுகள் செய்தால், இவ்வித கெடுதல்களை நிவர்த்திசெய்யலாமென்று நம்பப்படுகிறது.

---

## ராஜாங்கசபை

புதிய டில்லி டிச 15

புதிய ராஜாங்கசபையின் முதல் கூட்டம் பிப்ரவரி 15ந் தேதியன்று கூடுமெனத் தெரிகிறது.

## மலாய் நாட்டு சந்தாதார்கட்கு

மலாய் நாட்டிலுள்ள சந்தாதார்கள் தங்கள் சந்தாத் தொகையை இனிமேல் அரு. ராம. வி. சொக்கலிங்கம் செட்டியாரவர்களிடம் செலுத்தும்படி வேண்டுகிறோம்.

மானேஜர், "குமரன்"
காரைக்குடி.


# குமரன்

காரைக்குடி
தாது-ஸு மார்கழி 3உ


## மன்னர் துறவு

தந்தை காதலுக்கு இடங்கொடுத்துத் தான் துறவுகொண்ட பீஷ்மர் கதையைப் பாரதத்தில் படிக்கிறோம். பிரிட்டனின் பீஷ்மராக இன்று 8-வது எட்வர்டு மன்னர் துறவு பூண்டிருக்கிறார். உலகத்தின் பெரிய சாம்ராஜ்யமானது பரம்பரைச் சொத்தாகக் கிடைத்த பொழுது காதல் குறுக்கிட்டு நின்றது. காதலர் யார்? காதல்மணம் ஜாதிமணமாயின் ஆக்ஷேபனை எழுந்திருக்க இடமேற்பட்டிராது. மணம் கலப்புமணம்! கலப்பென்றால் லேசான கலப்பன்று. ஜாதியால் கலப்பு, தேசத்தால் கலப்பு, மதத்தாற் கலப்பு, தகுதியாற் கலப்பு, மன்னர் காதலைப்பெற்ற சீமாட்டி சிம்ஸன், அமெரிக்கமாது. அரசகுடும்பத்திற் பிறந்தவருமல்லர். இப்படிப்பட்ட கலியாணங்கள் அரச குடும்பங்களில் பட்டத்து மன்னருக்கு நடப்பதென்பது மிக அபூர்வமன்றோ? நமது எட்வர்டு மன்னரின் காதல் அம்மங்கைபாற் சென்றுவிட்டது. வேறு பெண்ணை நாட அவர் மனம் இடந்தரவில்லை. மந்திரிகளும் பிறரும் கவலைப்பட்டனர். தங்கட்கு ஒத்துவராத பெண்ணை அரசியாக ஏற்பதென்பது அவர்கட்கு விருப்பந்தரக் கூடியதா? தவிர அப்பெண்ணின் மணமானது முதல் மணமுமன்று. மறுமணம்; மூன்றாவது மணமாகவுமிருக்கிறது. கிறிஸ்தவர்களுள் மறுமணம் மூன்றாவது மணம் யாவும் கௌரவமாக அனுஷ்டிக்கப்பட்டு வழக்கத்திலிருந்தாலும், மன்னர் விவாக விஷயத்தில் இது பெருங் குறையென்று பலரால் பகிரங்கமாகக் கூறப்பட்டது. ஏகாதிபத்தியம் முழுமையும் இவ்விஷயம் கவலைக்கிடமாக இருந்தது. பல புத்திமான்கள் மன்னர்கட்கு வைப்பாட்டிகள் இருப்பது சகஜந்தானென்றும் அப்படி இவரும் ஜாதிப்பெண்ணை மன்னர் குமாரியை ஒழுங்கு மணமாற்றிக் கொண்டு இப்பெண்ணை வைப்பாட்டியாக வைத்துக் கொள்ளலாமென்றும் வெளியிட்டனர். இப் பெண்ணை விட்டுவிட மன்னருக்கு மனமில்லை- இப் பெண்ணை மணந்தாலென்ன செய்கின்றதென்று மந்திரி பிரதானிகள் மலைக்கும் போதுதான் இந்த யோசனையைச் சிலர் கிளப்பினர். இந்த நெருக்கடியின் முடிவை உலகம் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தது. ஆனால் மன்னர் "காதல் பெரிதெனக்கும் காசு பெரிதில்லை" யென்றாதிரியில் பட்டத்தைத் துறந்தார். உண்மைக் காதல் தோன்றுமாயின் உலகில் மற்றெந்தப் பவியும் பெரிதாகத் தோன்றாதென்பதற்கு இந்த சம்பவமொன்றே போதியதாகுமன்றோ?

## சென்னை சட்டசபை

### இராமநாதபுரம் ஜில்லாத் தொகுதிகள்

சென்னை சட்டசபைக்கு இராமநாதபுரம் ஜில்லாவில் 5 ஸ்தானங்களுண்டு. அந்த ஸ்தானங்களுக்குரிய தொகுதி வருமாறு:—

| | |
|---|---|
| ஸ்ரீவில்லிபுத்தூர் தாலூகா | 1 |
| சாத்தூர் அருப்புக்கோட்டை தாலூகாக்கள் | 1 |
| இராமநாதபுரம் டிவிஷன் | 1 |
| திருப்பத்தூர் தாலூகா | 1 |
| சிவகங்கை திருவாடானை தாலூகாக்கள் | 1 |



30—11—36ல் இரங்கூனில் கூடிய அகில பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் மகாநாட்டுக் காரியதரிசி திருவாளர் சா. ராம. சித. ச. நாச்சியப்பசெட்டியார்

## தேர்தல் எதிரொலி
### பறையர்கள் தாக்கப்பட்டனர்
காங்கிரசிற்கு வோட்டுப்போடாதது காரணமாம்

காரைக்குடி டிச, 16

திருப்பத்தூர் சர்க்கிளுக்கு நடைபெற்ற சென்ற ராமநாதபுரம் ஜில்லா போர்டு தேர்தலில் காங்கிரஸ் அபேக்ஷகர்களுக்கு வோட்டுப் போடவேண்டுமென்று வற்புறுத்தியும் வோட்டுப் போடாமல் காங்கிரஸல்லாத கக்ஷி அபேக்ஷகர்களுக்கு வோட்டுப்போட்டதாக தெம்மாப்பட்டு கிராம பறையர்கள் அவ்வூர் நாட்டார்களால் குற்றம் சாட்டப்பட்டு அவர்களுடைய ஊர் சேவகத்தை நிறுத்திவைக்கப்பட்டு, அவர்களுக்குப்பதிலாக பள்ளர்கள் நியமிக்கப்பட்டிருந்ததாகவும் நேற்று காலையில் ஷை கிராமத்தில் மஞ்சுவிரட்டிற்காக பறையர்கள் வழக்கம்போல் தப்புகொட்டிக்கொண்டு போகையில் நாட்டார்களால் தடிகள் கொண்டு தாக்கப்பட்டதன் பயனாக ஆண்டி வகையரு 5 பேர் காயமடைந்திருப்பதாகவும் செய்தி கிடைத்துள்ளது. போலீசுக்குத் தகவல் கிடைக்கவும் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் தக்க போலீஸ் பந்தோபஸ்துடன் ஸ்தலத்திற்குச் சென்று மேற்கொண்டு சச்சரவு ஏற்படாமல் தடுத்து, ராமசாமி சேர்வை, முத்துவீரு சேர்வை, காசி அம்பலம், குமாரசாமி பிள்ளை, கருப்பையா சேர்வை, ஆதினமிளகிக் கோன் ஆகியவர்களை இ. பி. கோ. 147, 323 பிரிவுகளின்படி கைது செய்து காவலில் வைத்திருக்கின்றனர். கைது செய்யப்பட்ட எதிரிகள் மேற் கூறப்பட்ட பறையர்களிடமிருந்து காங்கிரஸிற்கு வோட்டுப் போடாத குற்றத்திற்காக அதிக அபராதம் வசூலித்ததாகக் கூறப்படுகிறது. போலீஸார் இது சம்பந்தமாக மேலும் விசாரணை செய்து வருகின்றனர்.

# ராமநாதபுரம் ஜில்லாபோர்டு தேர்தல்
## பள்ளத்தூர் சர்க்கிள் தேர்தல் முடிவு
### ஸ்ரீ C. V. C. T. V. வெங்கடாசலம் செட்டியார் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

காரைக்குடி டிச, 16

சென்ற நவம்பர் 23உ நடைபெற்ற ராமநாதபுரம் ஜில்லாபோர்டு தேர்தலில் பள்ளத்தூர் சர்க்கிள் பெரிய கோட்டையில் சில சச்சரவுகளேற்பட்டதின் நிமித்தம் தேர்தல் நிறுத்தப்பட்டு சர்க்கார் உத்திரவுப்படி டிசம்பர் 14-ந்தேதியில் பள்ளத்தூர் சர்க்கிள் பூராவுக்கும் நடைபெற்ற மறு தேர்தலின் ஓட்டுகள் நேற்றையதினம் திருப்பத்தூர் தாலூகா மாஜிஸ்ட்ரேட் ஆபிஸில் தாலூகா மாஜிஸ்ட்ரேட் ஸ்ரீ சீதாராம சேர்வையவர்களால் எண்ணப்பட்டன. சென்ற தேர்தல் எண்ணிக்கை தினம் போலல்லாது நேற்றைய தினம் எண்ணிக்கை நடக்குமிடத்தில் யாதொரு கூச்சலும் கூட்டமும் இல்லை. தேர்தல் வெற்றியைக் கேட்டு ஆவாரம் செய்ய ஜனங்கள் தாலூகா ஆபீஸ் காம்பவுண்டிற்கு வெளியே கூடியிருந்தனர். ஏராளமான ரிசர்வ் போலீஸ் பந்தோபஸ்து பலமாக இருந்தது. வோட்டுகள் எண்ணிக்கை முடிந்ததும், தாலூகா மாஜிஸ்ட்ரேட் அவர்கள், ஸ்ரீ C. V. CT. V. வெங்கிடாசலம் செட்டியார் 401 வோட்டுகள் மெஜாரிட்டிபெற்று மெம்பராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதாகப் பிரகடனம் செய்தார்.

| | |
|---|---|
| C. V. CT. V. வெங்கிடாஜலம் செட்டியார் | 2173 |
| வெ. வீர. நா. அரு. நாகப்ப செட்டியார் (காங்கிரஸ்) | 1772 |
| செல்லுபடியாகாதவை | 32 |

பள்ளத்தூர் சர்க்கிலுள்ள மொத்தம் 5700 வோட்டுகளில் 3977 ஓட்டுகள் பதிப்பாயின. பதிவாகியிருக்கின்றன.

## காரைக்குடியில் விதவா மணம்
### தோழர் எ. ரங்கசாமி அய்யங்கார் தலைமைவகித்தார்.

13—12—36 ஞாயிற்றுக்கிழமை மாலை 3 மணிக்கு காரைக்குடி நா. புதூர் தோழர் மாந்தாதா ப. வ. சுந்தரப்பத்தர் அவர்கள் இல்லத்தில் தமிழர் சீர்திருத்த (காரைக்குடி கிளை) சங்கத்தின் ஆதரவில் தேவகோட்டை அட்வகேட் தோழர் ஏ. இரங்கசாமி அய்யங்கார் பி. ஏ. பி. எல். அவர்கள் தலைமையின்கீழ் காரைக்குடி சிதம்பர ஆச்சாரியார் புதல்வர் தோழர் சுப்பையாவுக்கும் ஷெயூர் எம். சுப்பையா ஆச்சாரியார் புதல்வி தோழர் நாராகூி அம்மாளுக்கும் மறுமணம் நடைபெற்றது. உள்ளூர் வெளியூர்களிலிருந்து சகோதர சகோதரிகள் திரளாக வந்திருந்தனர். தோழர் எஸ். வள்ளிக்கண்ணு அம்மாளால் சீர்திருத்தப் பாட்டு பாடப்பெற்றதும் தலைவர் கட்டளைப்படி மணமக்கள் தங்கள் ஒப்பந்தங்களைப் படித்து மாலை மாற்றிக் கொண்டார்கள். தோழர்களான ராம. அழகப்பன், வி. ராதாகிருஷ்ணன், முகவை ராஜமாணிக்கம், எம். ஆர். கிருஷ்ணசாமி ஐயங்கார் பி.ஏ., பி.எல்., பிச்சப்பாசுப்பிரமணியம் வி. பரமசிவம், தி. ம. நடராஜன், கே. என். தங்கவேலு ஆகியோர்கள் சீர்திருத்த சம்மந்தமாய் சொற்பொழிவாற்றி மணமக்களை வாழ்த்தினார்கள். மணமக்களும் தலைவர்களும் அடங்கிய படம் எடுக்கப்பட்டது.

மணம் செய்துகொள்ள சம்மதித்து சங்கத்தில் அப்ளிகேஷன் கொடுத்திருக்கும் விதவை சகோதரிகளுக்கு பெற்றோர்களால் ஏற்பட்டிருக்கும் இடைஞ்சலை நிவர்த்திசெய்து அவர்களை மணம் செய்துகொடுக்கிறது வரை சங்கத்தில் விருந்து உடை, உணவு, கல்வி முதலிய வசதிகளளித்து ஆதரிப்பதற்கு திருநெல்வேலியில் கூடியசீக்கிரம் விதவா ஆச்சிரமம் ஸ்தாபிக்க முயற்சி எடுக்கும்படி தலைமை சங்க கமிட்டியார்களை இக் கூட்டம் கேட்டுக் கொள்ளப்படுகிறதென்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பின் தலைவர் முடிவுரையாக விதவை மணமென்று வழங்குவது பெண்களை இழிவுபடுத்தக் கூடியதென்றும் பெண்களுக்கு மறுமணம் கூடாதென்று மறுப்பவர்கள் கடவுள் கட்டளையை மீறினவர்களென்றும் கல்யாணம் என்னும் வழக்கமே கபடத்தனமானதென்றும் அன்பு மேலீட்டால் ஏற்படும் காதலே சிறந்ததென்றும் ஆடம்பர கல்யாணங்களின் தீமைகளைப்பற்றியும் 2மணி நேரம் சவிஸ்தாரமாக உபந்நியாசம் செய்தார்கள். கிளை சங்க காரியதரிசி தோழர். திருநெல்லை ஆச்சி அவர்கள் வந்தனோபசாரம் கூறினார்கள். தலைவருக்கு மலர் மாலை அணிவிக்கப்பட்டு சந்தன தாம்பூலம் தமிழர் சீர்திருத்த சங்க வெளியீடுகள் வழங்கி மண வைபவம் வெற்றிகரமாக நிறைவேறி செக்காலை ரோடு மணமகன் இல்லத்திற்கு மணமக்களை காரில் அழைத்துவரப்பட்டது. காரைக்குடி விஸ்வப்பிராமணர்களில் இதுவே முதல் கல்யாணமென்பதும் தவிர சமூக ஆண், பெண் இரு பாலர்களும் வந்திருந்து குதூகலத்துடன் ஒத்துழைத்ததுமன்னியில் காரைக்குடி விசுவப்பிராமண நாட்டாண்மைக்காரருள் பலர் உள்பட பிரபலஸ்தர்கள் ஏராளமாக விஜயம் செய்திருந்தது குறிப்பிடத்தக்கது.

### ராஜாங்க சபை
#### தேர்தல் முடிவு

சென்னை டிச. 15.

இன்று ராஜாங்கசபைத் தேர்தலின் ஓட்டுகள் எண்ணப்பட்டன. மொத்தம் பதிவான ஓட்டுக்களை எண்ணி கணக்கிட்ட பிறகு வெற்றிபெறுவதற்கு 557 முதல் ஓட்டுக்கள் வேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டது. ஒவ்வொரு வருக்கும் கிடைத்த முதல் ஓட்டுக்களின் விபரமாவது:—

| | |
|---|---|
| திரு. கோவிந்தாச்சாரியார் | 735 |
| திரு. சிதம்பரம் செட்டியார் | 617 |
| திரு. நாராயணதாஸ் கிரிதர்தாஸ் | 588 |
| திரு. ராமதாஸ் பந்துலு | 522 |
| திரு. ரங்கநாயகலு | 320 |

முதல் மூவரும் தேவையான அளவுக்கு அதிகமான முதல் ஓட்டுக்கள் பெற்றுவிட்டதால் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டதாக அறிவிக்கப்பட்டது.

தேவைக்கு அதிகமாக ஓட்டு பெற்றவர்களுடைய முதல் ஓட்டுகளை மாற்றியதில் திரு. ராமதாஸ் பந்துலுக்கு 106 அதிக ஓட்டுகள் கிடைத்தன. அவரும் தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டார்.

முஸ்லிம் தொகுதி

| | |
|---|---|
| ஜனாப் சையது முகம்மது பாஷா | 126 |
| ஜனாப் மகம்மதுமீரான் | 55 |
| செல்லுபடியற்றது | 1 |



## சுகாதாரவாரம்
### திருநெல்வேலி ஜில்லாபோர்டுத் தலைவர் பரிசளித்தார்

டிசம்பர் 9-உ
நான்காம் நாள்

இன்று நகரத்தின் வார்டுகள் ஆஸ்பத்திரிகள் முதலியன பார்வையிடப்பெற்றன. மிருகக்காட்சி, சைக்கிள் பந்தயமும் நடைபெற்றது. மீனாட்சி பெண் பாடசாலையை சுகாதாரக் கமிட்டியார் பார்வையிட்டனர். மழையின் காரணமாக மாலைப் பொதுக் கூட்டங்கள் நடைபெறவில்லை.

டிசம்பர் 10-உ
ஐந்தாம் நாள்

இன்று காலை பெண்கள் தினம். கல்வி இலாகா இன்ஸ்பெக்டர் ஸ்ரீமதி சங்குண்ணி எம். ஏ., எல். டி. அவர்கள் தலைமையில் கொண்டாடப்பெற்றது. மீனாட்சி பெண் பாடசாலை மாணவிகள் கோலாட்டம் கும்மி முதலியவற்றை நடத்தினர். தேவகோட்டை கௌரவ மாஜிஸ்டிரேட் கமலா சிவசுப்பிரமணியம் அவர்கள் "சுகாதார முன்னா வீடு" என்பது குறித்துச் சொற்பொழிவாற்றினர். பின்னர் குழந்தைகள் காட்சி நடைபெற்றது. 100 குழந்தைகள் வரை வந்திருந்தனர். பரிசுக்குரிய மூன்று குழந்தைகளைத் தேர்ந்தெடுத்தார்கள். தின்பண்டங்கள் வழங்கப்பெற்றபின் குரூப் போட்டோ எடுக்கப்பெற்றது.

மாலையில் திரு. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் தலைமையில் டாக்டர் பீமசிங் அவர்கள், ராம. சிதம்பரம் அவர்கள் ஆகியவர்கள் சுகாதார சம்பந்தமான சொற்பொழிவுகள் ஆற்றினர்.

பின்னர் திரு. நாச்சியப்ப செட்டியாரவர்களால் வந்தனோபசாரம் கூறப்பெற்றது.

தேவகோட்டை சப்ஜட்ஜ் குமார சக்கரவர்த்தி அய்யங்கார் அவர்கள் முன்னிலையில் ஹைஸ்கூல் சாரணர் காட்சிகள் செய்துகாட்டினர். சப்ஜட்ஜ் அவர்கள் சுகாதார வாரக் கமிட்டியார், சேர்மென், கமிஷனர், ஆகியவர்களைப் பாராட்டிப் பேசினர். ராமநாதபுரம் தேவகுஞ்சரி அம்மாள் சகோதரிகள் பாட்டுக்கச்சேரியும் படக்காட்சியும் நடைபெற்றது.

### பரிசளிப்பு விழா

11ந் தேதியன்று திருநெல்வேலி ஜில்லா போர்டுத் தலைவர் திரு. எம். டி. டி. குமாரசாமி முதலியார் அவர்கள் தலைமையில் பரிசளிப்பு விழா நடைபெற்றது. முனிசிபல் ஆபீஸிலிருந்து தலைவரை பாண்டு வாத்தியங்களுடன் அழைத்து வந்தனர். சிசுவாரக் கமிட்டித் தலைவர் திரு. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்களால் மாலையணிவிக்கப் பெற்றது. தலைவரவர்களால் பரிசுகள் வழங்கப் பெற்றபின் கமிட்டியாரால் ஏராளமான ஹரிஜனங்கட்கு உணவளிக்கப் பெற்றது. ஸ்ரீமான். ராமசாமி சாஸ்திரிகள், என். எஸ். மணி முதலியவர்களால் சொற்பொழிவுகள் நடைபெற்றன. கமிட்டிக் காரியதரிசி டாக்டர் ரத்னசாமி அய்யரவர்கள் கமிட்டி மெம்பர்கள், தலைவர், பொது ஜனங்கள் ஆகியவர்களுக்கு நன்றி தெரிவிக்கப்பட்டது. உதவிக் காரியதரிசி ஸ்ரீமான் சு. மு. பழ. நாச்சியப்ப செட்டியாரவர்கள் கமிட்டியாரின் அறிக்கையை வாசித்தார்கள்.

பிறகு கமிஷனர் திரு. புருஷோத்தம முதலியாரவர்களால் முனிசிபல் சபையின் சார்பாகவும் கமிட்டித் தலைவர் சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களால் கமிட்டி சார்பாகவும் வந்தனம் கூறப்பட்டது. வாணக் காட்சிக்குப் பின் அருப்புக்கோட்டை எஸ். கணேசன் அவர்களால் சங்கீதக்கச்சேரி நடத்தப்பட்டது. இத்துடன் சுகாதார வார விழா இனிது நிறைவேறியது.

### பரிதாபம்!
(ஒரு நிருபர்)

கண்டரமாணிக்கம் திரு. பெரி. பெரி. சுப. பழனியப்ப செட்டியாரவர்கள் வயிற்றுவலியால் சிலகாலமாகக் கஷ்டப்பட்டு வந்தார். ஆபரேஷன் செய்யப்பட்டு குணமாகாமல் சென்ற வாரம் மரணமடைந்தார். வயது 20 கலியாண மானவர் மனைவிக்கு வயது 18 பெண் குழந்தை யொன்றிருக்கிறது. பெண்ணுக்கேற்பட்ட இந்த பரிதாபகரமான நிலைமைக்கு வருந்தாதார் இல்லை.

# ஸர்தார் படேலுக்கு காரைக்குடி நகரசபை வரவேற்பு
## நகர பரிபாலனம்பற்றி படேலின் நல்லுரைகள்
## காரைக்குடியை தேவலோகமாக்குங்கள்

காரைக்குடி, டிசம்பர் 16.

இன்று மாலை 4 மணிக்கு அகில இந்திய பார்லிமெண்டரி போர்டு தலைவர் சர்தார் வல்லபாய் படேல் அவர்கள் காரைக்குடிக்கு விஜயஞ் செய்தார்கள். உள்ளூர்க் காங்கிரஸ் கமிட்டியாராலும் பொதுமக்களாலும் ரயில்வே ஸ்டேஷனில் மாலையணிவித்து வரவேற்கப் பெற்றபின்பு, முக்கிய தெருக்கள் வழியாக பாண்டு வாத்தியங்கள் முழங்க ஊர்வலம் நடைபெற்றது. மாலை சுமார் 5 மணிக்கு ஸ்ரீமான் படேல் காரைக்குடி முனிஸிபல் உபசாரத்தை ஏற்றுக்கொள்ள வந்து சேர்ந்தார். ஏராளமான ஜனங்கள் வந்திருந்தனர். 9 கவுன்ஸிலர்கள் வந்திருந்தனர். திரு. படேல் அவர்களுக்கு கௌன்ஸிலர்களை அறிமுகம் செய்து வைத்தபின்பு வைஸ்சேர்மென் அவர்களால் மாலையணிவித்து உபசாரப்பத்திரம் வாசித்தளிக்கப்பெற்றது.

திரு. வல்லபாய் படேல் அவர்கள் உபசாரப் பத்திரத்திற்கு அளித்த பதிலின் சாரம்:- (படேல் அவர்களின் ஆங்கிலப் பிரசங்கம் திரு. சத்தியமூர்த்தியால் மொழி பெயர்க்கப்பட்டது)

சேர்மன் அவர்களே! அங்கத்தினர்களே! ஆர்வத்துடன் நீங்கள் அளித்த உபசாரத்திற்காகவும், வரவேற்புக்காகவும் வந்தனம் செலுத்துகிறேன். நகர சபை விஷயங்களில் எனக்கு ஏராளமான அனுபவமுண்டு. அனேக வருஷங்கள் நகர பரிபாலன விஷயத்தில் நான் கவனம் செலுத்தியிருக்கிறேன். நீங்கள் அளித்த உபசாரத்திற்கு நான் பதில் கூறு முகத்தான் நகரத்தை எப்படி பரிபாலிப்பது என்பதைப்பற்றி உங்களுக்குக் கூறுவது உபயோகமாக இருக்கும். இந்த முனிசிபாலிடி மிகவும் சிறியதுதான். இவ்வூரில் 22,000 ஜனங்கள் இருக்கிறீர்கள். இந் நகர் சுற்றிலும் ரம்மியமான தோற்றத்தையுடையதாக இருக்கிறது. மின்சாரம், தண்ணீர், நல்ல சீதோஷ்ணம், அதிக ஜன நெருக்கமில்லாமை முதலிய சௌகரியங்கள் இங்கிருக்கின்றன. நீங்கள் உங்கள் கவனத்தை ஆழ்ந்து செலுத்தினால் இந் நகரை ஒரு தெய்வலோகமாகச் செய்யமுடியும். அரண்மனைபோன்ற ஏராளமான கட்டிடங்கள் இருக்கின்றன. உங்களைப் பார்க்கையில் ஏழைகள் அல்லவென்று தோன்றுகிறது. ஒரு ஜில்லா போர்டு சீட்டுக்காக லட்சக்கணக்கில் செலவு செய்யும் பிரக்யாதி பெற்றிருக்கிறீர்கள். (கரகோஷம்) இந்தப்பணம் நல்ல ரோடு, வைத்திய வசதி, கல்வி, பூந்தோட்டம் முதலியவற்றிற்கு செலவழிக்கப்படுமானால் இந்நகர் ஏன் தெய்வலோகமாகிவிடமாட்டாது? உங்கள் முனிஸிபல் கௌன்ஸிலர்களிற் சிலரை ஐரோப்பாக் கண்டத்துக்கு அனுப்புவது நன்மையாக இருக்குமென்று கருதுகிறேன். மேல் நாட்டு நாகரிகத்தில் நிராகரிக்கத்தக்க விஷயங்கள் பல உண்டெனினும் மேனாட்டாரிடம் சுகாதாரம் போன்ற பல விஷயங்களை நாம் படித்துக்கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம். என் கையில் அதிகாரம் இருந்தால் நான் அரசாங்கத்தை நடத்துபவனாக இருந்தால் முதலில் தண்ணீர்க் குழாய்களை வைக்க அனுமதிக்கமாட்டேன். சாக்கடைத் திட்டம் முதலில் வேண்டும். வீட்டு வாசலில் குழாயை வைத்து அதிலிருந்து அசுத்தத் தண்ணீர் வெளியில் போகச் சாக்கடையில்லாமல் இருப்பது எல்லா வியாதிகளையும் வரவழைப்பதாகும். இந்த மாகாணத்தில் எனக்குத் தெரிந்து இரண்டு நகரங்களைத் தவிர வேறெங்கும் பூமிக்குக் கீழ் ஓடும் சாக்கடைகள் கிடையா. இது பட்டணங்களுக்கு அத்தியாவசியமானது. பணக்காரர் வசிக்கும் இவ்வூரில் சாக்கடைத் திட்டம் மிக எளிதாக நிறைவேற்ற முடியும். நல்ல வருமானம் கிடைக்கிறது. சாக்கடை வருமானத்தாலேயே சாக்கடையை ஒழுங்காக வைத்துக்கொள்ளலாம். மேல் நாடுகளில் ஒரு கனவானின் சல்லாப அறை எப்படி இருக்குமோ அதே போல கக்கூசும் குளிக்கும் அறையும் இருக்கின்றன. புத்தகத்தைப் படித்துக்கொண்டு மலஜலம் சாவகாசமாகக் கழிக்கலாம். இந்நாட்டிலோ கக்கூஸ்கள் ரொம்ப மோசம். துர்நாற்றம் அதிகம். ஈ, எறும்புகள், புழுக்கள் முதலியன ஏராளம், கக்கூசுக்குள் சென்றால் கால் கைகளைக் கழுவாமல் வெளியில் வர முடியாது. மேல்நாட்டில் அப்படியல்ல. கக்கூசுக்குள் சென்றவன் நேராகச் சமையலறைக்கும் வரலாம். அவ்வளவு சுத்தமாக இருக்கின்றன.

பெரிய ஊர்களில் மனிதனால் சாக்கடை முதலியவற்றை சுத்தம் செய்வது சாத்தியமல்ல. இந்தச் வேலையைச் செய்பவர்களை நாம் தீண்டாதவர்கள் என்கிறோம். அவர்கள் இல்லாமல் நம்மால் ஒன்றுமே செய்ய முடியாது. அவர்களுக்கு நகர சபைகளில் சம்பளமும் குறைவுதான். சாக்கடைத் திட்டத்தைப்பற்றி நீங்கள் யோசித்துக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. இப்படியே 30, 40 வருஷம் யோசித்துக்கொண்டிருக்கலாம். ஆமதாபாத்தில் நான் நகரசபைத் தலைவனாக இருக்கையில் நிறைவேறிய சாக்கடைத் திட்டம் எனக்கு 30 வருஷங்களுக்குமுன்வரை யோசித்துக்கொண்டு தான் இருந்தார்கள். அது பணக்கார நகரந்தான். இருந்தாலும் சுகாதார விஷயத்தில் சரியான உணர்ச்சி கிடையாது.

ஊர்தோறும் தோறும் கோயில்கள் நிர்மாணிப்பது போன்று ஊர் தோறும் சாக்கடைத் திட்டம் அவசியமாகும். நீங்கள் மனதுவைத்தால் இது பெரிய காரியமன்று, பரிபாலனத்துக்காகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற அங்கத்தினர்கள் தங்கள் கலைகக் கவனிப்பது பெருங் குற்றமாகும், தேர்ந்தெடுக்கப்பெற்றவர்கள் பொதுஜன சேவை செய்யும் தர்மகர்த்தாக்கள் போல் இருக்க வேண்டும். பொதுஸ்தாபனங்களில் ஒருவரையொருவர் விலக்கி தாங்கள் ஸ்தானம் பெற வேண்டுமென்று பலர் பிரியப்படுகிறார்கள். யார் ஸ்தானம் பெற எத்தனிக்கிறார்களோ அவர்கள் நாணயமாகவும் பொது ஜன நன்மையாளர்களாகவும் இருப்பார்களானால் அவர்கள்தான் ஸ்தானம்பெற உரிமையுள்ளவர்கள். ஓட்டர்கள் மனதில் சரியான உணர்ச்சி இல்லாமையே கேடுகளுக்கெல்லாம் காரணம். இந்த மாதிரி வேறு தேசங்களில் தேர்தல்கடந்தால் ரணகளந்தான். நமது ஜனங்கள் எதையும், பொறுத்துக்கொள்ளக்கூடியவர்கள். (சிரிப்பு) உதார குணமுடையவர்கள். இதற்காக அவர்கள் வாயில் மண்ணைப்போடக்கூடாது. அவர்களுக்கு உழைக்க உத்தேசமில்லாதவர்கள் ஸ்தானங்களை விரும்பக் கூடாது. எனக்குத் தெரிந்த நிச்சயமான சில உண்மைகளை உங்களுக்குக் கூறினேன். நீங்கள் அதைப் பின்பற்றி நடக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். உங்கட்கு உண்மையான ஆசையிருக்குமானால் சுயராஜ்ய காலத்தில் இந்த நகரத்தை எவ்வளவு அழகாக வைத்திருக்க முடியுமோ அவ்வளவு சிறப்பாக இப்பொழுதும் வைத்திருக்கமுடியும் உங்கள் உபசாரத்திற்கு மீண்டும் வந்தனம். பின்பு மாலையில் காந்திசவுக்கில் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

### திருநெல்வேலி ஜில்லாபோர்டு தலைவருக்கு விருந்து

காரைக்குடி டிச 11

திருநெல்வேலி ஜில்லா போர்டு தலைவர் மேடை தளவாய் குமாரசாமி முதலியார் அவர்களுக்கு தேசிய சுகாதார சிசுவார கமிட்டித் தலைவர் ஸ்ரீமான் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களால் முனிசிபல் ஆபீஸ் மேல் மாடியில் தேனீர் விருந்து அளிக்கப் பெற்றது. கமிட்டி மெம்பர்களும் ஏனைய பிரமுகர்களும் விஜயம் செய்திருந்தனர். முடிவில் சுந்தா பாகவதர் அவர்களால் தக்க பக்கமேளத்துடன் சங்கீதக் கச்சேரி நடைபெற்றது.

## தந்திச் செய்தி

### இரங்கூன் மார்க்கெட்
(நமது நிருபர் தந்தி)

ரெங்கூன், டிசம்பர் 16.

| | |
|---|---|
| படகு நெல் (புதிது) | 90, 97 |
| ரயில் நெல் | 100 |
| நசெய்ன் சின்னமில் | 267-8 |
| நசெய்ன் எஸ்மிபூ | 250 |
| மீடோன் பஜார் | 247-8 |
| மீடோன் எஸ்மிபூ | 260 |
| ரெடி புழுங்கலரிசி மார்க்கெட் ரேங் | 257-8, 267-8 |
| மில்சார் | 237-8, 262-8 |
| புல்பாயில்டு | Nil |
| பாதாலே | 269-8, 295 |
| வெள்ளை பீன்ஸ் | 160, 165 |
| சிவப்பு பீன்ஸ் | 160, 170 |
| பட்டர் பீன்ஸ் | 175, 180 |
| க்ரௌண்ட் பீன்ஸ் | 122-8, 135 |
| உளுந்து | 175—205 |
| கோதுமை | 270—320 |
| தினை | ஸ்டாக் இல்லை |
| சோளம் | 10—125 |
| எள்ளு (புதிது) | 390, 410 |
| பருத்திவிதை | 4-8 |

### லண்டன் மார்க்கெட்
ரப்பர் விலை

டிசம்பர் 12உ ராத்தல் ஒன்றுக்கு ஒன்பதே மூன்று வீசம் பென்ஸ்.

### சென்னை மார்க்கெட்

சென்னை டிசம்பர் 15

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 34 | 15 | 3 |
| ஷை வாயிதா | 35 | 1 | 6 |
| மூலா தோலா 1-க்கு | 34 | 7 | 3 |
| சவரன் மொத்தம் | 22 | 4 | 0 |
| ஷை சில்லறை | 22 | 4 | 6 |
| வெள்ளி 100 ரூ. எடை | 52 | 6 | 0 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 8 | 9 |

### கொழும்பு மார்க்கெட்
(நமது நிருபர்)

கொழும்பு டிசம்பர் 15

| | |
|---|---|
| ரப்பர் கிரேப் ராத்தல் | 52 |
| " ஷீட் " | 48½ |
| ரப்பர் கூப்பன்ராத்தல் | 35¾—35½ |
| தேயிலை கூப்பன் ராத்தல் | 48 |
| தேங்காய் எண்ணை | |
| F. O. B. வெள்ளை டன் | 395 |
| ஷை சாதா | 393—75 |
| பிரிஸ்டல் தும்பு கம்பர் 1 அந்தர் | 4-15 |
| மெட்ராஸ், கம்பர் 1-அந்தர் | 1—90 |
| தேங்காய்ப்பூ ராத்தல் 1க்கு | 13 |

## கப்பல் செய்திகள்
### நாகபட்டினத்திற்கும் பினாங்குக்கும்
(ஏஜண்டிடமிருந்து)

புறப்படுதல்

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரோணா | 19—12—36 |

வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா | 24—12—36 |

### பி. அண்டு ஓ மெயில்கள்

கொழும்பிலிருந்து மலாய் நாட்டுக்கு புறப்படும் கப்பல்களும் தேதிகளும்:—

| | |
|---|---|
| ராவல்பிண்டி | 27—12—36 |

### சென்னை அசெம்பிளி பிரதம தேர்தல்
மிஸஸ் சிவராஜ் வாபஸ் வாங்கினார்

சென்னை அசெம்பிளி பிரதம தேர்தலுக்கு அபேக்ஷகராய் நின்ற மிஸஸ் மீனாம்பாள் சிவராஜ் தாம் அபேட்சகராக நிற்கவில்லையென அறிவித்து விட்டார்.

## விதவையை மணந்த பிரிட்டிஷ் வேந்தன்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

மலிருந்திருக்கலாம். ஆனல் விதியை வெல்ல யாரால் முடியும்? விரைவில் அனிபொலின் ஹென்றி மன்னரின் துரோகியாகிவிட்டாள். அனிபொலின் மன்னரின் விரோதத்தைச் சம்பாதித்துக்கொண்டதால், அவர் அவளே சிறையிலடைக்க உத்தரவிட்டார். விசாரணையின்றி தன்னைத் தன் கணவர் சிறையிலடைத்தது குறித்து அனிபொலின் வருத்தமடைந்தாள். வருத்தம் தாங்கமாட்டாது அவள் இறுதியில் ஹென்றி மன்னருக்கு ஒரு கடிதம் எழுதினுள். அக் கடிதத்தில் தன்னை பகிரங்கமாக விசாரணை செய்யுமாறு வேண்டியிருந்தாள். அந்த வேண்டுகோளை ஹென்றி மன்னர் நிராகரித்துவிட்டார். அவர் அனிபோலின் அரசிக்கு மரண தண்டனை விதித்தார்.

பின்னர் ஜேன்ஸேமர் என்னும் மங்கைமீது அவர் காதல்கொண்டார். அனிபொலின் தூக்கிலிடப்பட்ட பின் ஜேன் ஸேமருக்கும், ஹென்றி மன்னருக்கும் விவாகம் நடந்தது. ஜேன் ஸேமரை மணப்பதற்கு முன்னர் அவருக்கு ஹென்றி மன்னர் பல கடிதங்களை எழுதியனுப்பினர். அவர் தமது காதற்கடிதங்களிலொன்றில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிருர்:—

என்னுடைய ஆருயிர்த் துணைவியே! இக்கடிதத்துடன் நான் அனுப்பியிருக்கும் வெகுமானத்தை நீ பிரியத்துடன் ஏற்றுக்கொள்வாயென்று நம்புகிறேன். அது நான் உன்மீது கொண்டிருக்கும் காதலின் அரிய சின்னமாகும். உன்னையும் என்னையும்பற்றி ஓர் அவதூருன பாட்டு வெளிவந்திருப்பதாக கேள்விப்படுகிறேன். அப்பாட்டில் அடங்கிய விஷயங்களை நீ நம்பாதே. மேற் கூறிய பாட்டை எழுதிய பேர்வழி யாரென்று தெரியவந்தால் அவன் என்னிடமிருந்து மிக மிகக் கடுமையான தண்டனையை அடையாமல் போகமாட்டான்.

## ராமநாதபுரம் ராஜா வெற்றி

### காங்கிரசுக்கு 2 ஸ்தானங்கள்

ராமநாதபுரம் டிச, 12

ராமநாதபுரம் தாலூகா தேவிப்பட்டணம் வட்டத்தில் நடந்த ஜில்லாபோர்டு தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்ஜனுப் மீரா ஹுசேன் ராவுத்தர் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஜனுப் மீரா ஹுசேன் ராவுத்தர் (கா) 1024. திரு. சோமசுந்தரம் பிள்ளை சுயேச்சை 918 செல்லுபடியாகாதவை 32.

ராமநாதபுரம் வட்டம்

| | ஓட்டுகள் |
|---|---|
| ராமநாதபுரம் ராஜா | 2213 |
| சௌமிய நாராயணய்யங்கார் (காங்கிரஸ்) | 8932 |

ராமநாதபுரம் ராஜா தேர்ந்தெடுக்கப் பெற்ருர்.

ஷை வட்டம் ஸ்திரீகள் தொகுதி

| | |
|---|---|
| டாக்டர் ஸ்ரீமதி ஜோன்ஸ் | 1887 |
| ஸ்ரீமதி ரேஸ் முத்தம்மாள் (காங்கிரஸ்) | 909 |

ஸ்ரீமதி ஜோன்ஸ் வெற்றியடைந்தார்

திருப்புல்லாணி வட்டம்

| | | |
|---|---|---|
| திரு. ராஜாராம் பாண்டியன் | (கா) | 952 |
| திரு. ராமசாமித் தேவர் | (சு) | 442 |
| செல்லுபடியாகாதவை | | 11 |

மண்டபம் வட்டம்

| | | |
|---|---|---|
| திரு. ரங்கசாமி அய்யங்கார் | (சு) | 575 |
| திரு. பாலசுப்பிரமணியம் | (கா) | 106 |
| திரு. குப்பை மணக்காயர் | (சு) | 275 |

## அலவாக்கோட்டை

### சாரதா வாசகசாலை

டிசம்பர், 12—

இன்று தினம் உபதலைவர் ஸ்ரீமான் சுப. ராம. வேலாயுதஞ் செட்டியாரவர்கள் தலைமையில் கூட்டம் நடந்தது. மாஜி காரியதரிசியின் ராஜிநாமா அங்கீகரிக்கப்பெற்று அப்பதவிக்கு ராம. சேதுராமன் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்ருர். மாதம் இருமுறை சொற்பொழிவுக்கூட்டம் நடத்துவதாகத்தீர்மானித்து உப காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறப்பெற்று கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## பர்மாவின் புதிய மந்திரிகள்

பர்மா கவர்னர் மாற்றப்பட்ட இலாக்காக்களை நிர்வகிப்பதற்காக ஐக்கியக் கட்சித் தலைவர்களின் உபாபியையும் ஊதின் மாங்கையும் மந்திரிகளாக நியமித்திருக்கிருர். 1-4-37க்குப் பிறகு உபாபி பிரதம மந்திரியாவார்.


# கார் தேவை.

சுமார் 8000 மைலுக்கு குறைந்து ஓடின ஆஸ்டின் 7, ஆஸ்டின் 10, 4 ஸிலிண்டர் போர்டு, V 8 போர்டு, செவர்லெட் இவைகளில் ஒன்று தேவை. விலை விபரங்களுடன் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும்.

S

C/o குமரன் ஆபீஸ்,

காரைக்குடி.



# நீங்கள் சென்னைக்கு வரும்பொழுது

ஒரே விலையுள்ள "ஸ்வதேசி ஷாப்" புக்கு விஜயம் செய்யுங்கள்!

ஏராளமான ஸ்டாக் உடையதும் கண் கவர் வனப்புடன் கூடிய ஆடைகளைப் பெற்றிருப்பதுமான பழமையானதும், சிறப்புற்றதுமான வியாபார ஸ்தலம்.

தி ஜெனரல் ஸ்வதேசிஸ் லிமிடெட்,

ஹைகோர்ட்டுக்கு எதிரே, சென்னை.


## நோட்டீஸ்

மதுரையிலிருக்கும்
இராமனுதபுரம் அபிஷியல்
ரிசீவர் கோர்ட்டு

ரெங்கோன்
ஹைகோர்ட்டு

I. C. 279 of 1931.

பள்ளத்தூர் சொக்கலிங்கம் செட்டியார் குமாரர்கள் S. T. S. S. P. S. சொக்கலிங்கம் செட்டியார் 1, சுப்பய்யா செட்டியார் 2, சிதம்பரம் செட்டியார் 3—இன்சால் வெண்டுகள்.

நாளது 1936-ஹு டிசம்பர் மீ 21-ந் தேதி மதுரை திருமலை நாயகர் மஹாலில் ஷை கோர்ட்டில் இன்சால் வெண்டுகளுக்குப் பாத்தியப்பட்ட இராமநாதபுரம் ஜில்லா பள்ளத்தூரில் உள்ள சொத்துக்களை இதனடியில் கைமொப்பமிட்டவரால் பஹிரங்கமாக ஏலம் போடப்படும்.

ஏல கண்டிஷன்களையும் மற்ற விஷயங்களையும் ஆபீஸில் ஆபீஸ் நேரங்களில் செலவில்லாமல் தெரிந்துகொள்ளலாம்.

R. கிருஷ்ணய்யர்,
மதுரையிலிருக்கும் இராமனுதபுரம்
அபிஷியல் ரிசீவர்,
மதுரை,
15—12—36.


# மற்றொரு முன்னேற்றம்!

பொதுஜனங்களுடைய நம்பிக்கையை பெற்றிருப்பது

# லக்ஷ்மி

முற்போக்கிலும் வெற்றியிலும் இதுவரை ஏற்படாத முதன்மை ஸ்தானம் வகித்திருக்கிறது.

# ரிவர்சினரி போனஸ்

1936 ஏப்ரல் 30உயோடு முடிகிற மூன்ருவது கால் வருடத்திற்கு வருடம் ஒன்றுக்கு ஆயிரத்திற்கு ரூ. 20 வீதம் பூரா ஆயுளுக்கும் ரிவர்சினரி போனஸ்கள் கொடுக்கப்படுகின்றன.

வருடம் ஒன்றுக்கு ஆயிரத்திற்கு ரூ. 16 வீதம் எண்டோமெண்டு போனஸ் தரப்படுகிறது.

லக்ஷ்மி இன்ஷூரன்ஸ் கம்பெனி லிமிடெட்,

மதராஸ் பிராஞ்சு, 334, சம்புச்செட்டித் தெரு, மதராஸ்.







ஒவ்வொரு தடவையும் நீங்கள் மார்கோ சோப்பினுல் ஸ்நானம் செய்வதாலும், ஸ்நானம் செய்வதாலும் பயங்கரமான தொத்து நோய் ஏற்படாமல் தடுக்கப்படுகிறீர்கள். வியாதி உண்டாக்கும் கிருமியை வளர்க்கும் அழுக்கையும், வாசனை பொருந்திய கிருமி நிவாரண நுரையைக் கொண்ட மார்கோ மருந்து சோப் சுத்தப்படுத்துகிறது.

MARGO SOAP

TOILET & MEDICINAL

மார்கோ சோப் பயங்கரமான தொத்து நோயையும், சரும வியாதியையும் வரவொட்டாமல் தடுப்பதுபோல் வேறு எந்தச்சோப்பும் செய்வதில்லை. ஆகையால் மார்கோ சோப்பை உங்கள் குடும்ப சோப்பாக உபயோகியுங்கள்.

CALCUTTA CHEMICAL


## மன்னரும் பாரதியும்

(V. P. S.)

என்ன வியப்பு! இந்தக் காதலுக்கு இருக்கும் சக்திதான் எவ்வளவு! அம்மம்ம! நினைக்கக் கூட முடியவில்லை. உலகத்திலே அதியற்புதமான செயல்களுக்கெல்லாம் இந்தக் காதல் தான் பிறப்பிடம் போலும்!

* * *

ஒரு முழு ரூபாயைக் கண்டு விட்டால் நமது மனம் எவ்வளவு குழப்பமடைந்து விடுகிறது. அந்த ஒரு ரூபாயைப் பெற எந்த நிபந்தனைக்கும் உட்படத் தயாராக இருக்கிருேம். சரி அதற்குமேல் பத்துரூபாயைக் கண்டு விட்டாலோ நமது அறிவு 1500 மைல் வேகத்தில் சுழல ஆரம்பிக்கின்றது. நமது கையில் எந்த வழியிலாவது வந்து சேர்ந்துவிடக் கூடாதா? என்று அங்கலாய்க்கிருேம். பிறகு அந்த ரூ எண்ணிக்கை 100,200,1000,10000 என்று வளர்ந்து போகுமானுல் சொல்லவே வேண்டியதில்லை. மனிதன் எதற்கும் தயாராய் விடுகிருன், எந்த அக்கிரமத்துக்கும் அவன் துணிந்தவனுகி விடுகிருன்.

* * *

இத்துடன் பட்டம் பதவிகளுக்காக மனிதன் படும் அவஸ்தையைச் சொல்ல முடியுமா? புழுவாய்த்துடிக்கிருன், பறவையாய்ப் பறக்கிருன், பணத்தைத் தண்ணீராக இறைக்கிருன், உண்டிமறந்து உடைமறந்து உற்ருர் உறவினர் மறந்து பெண்டுபிள்ளைகள் மறந்து என்னென்ன வெல்லாமோ மனிதன் செய்யச் சித்தமாக இருக்கிருன். எல்லாம் இந்த பட்டம் பதவிகளுக்காகத் தான்.

* * *

பாருங்கள் ஒரு சாம்ராஜ்யத்தின் ராஜபதவி, இதிலும் உலகமெல்லாம் மதிக்கத்தக்க பிரிட்டிஷ் ராஜாங்கம்; சூரியனே அஸ்தமிக்காத தேசம். உலக ஜனத்தொகையில் மூன்றிலொரு பங்கைத் தன்னகத்தே அடக்கிக் கொண்டுள்ள ஒரு மகத்தான ராஜ்யம். அதன் ராஜ்யாதிபதியாகும் விஷயம் எவ்வளவு மகத்தானது! ஆம்! அதுகூட அற்பமாகிவிட்டது அந்த மகா சக்திவாய்ந்த காதலின் முன்னுல்.

"நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம்
நுண்ணிடைப் பெண் ஒருத்தி
பணியிலே"

என்ற பாரதியின் வாக்குக்கூட எட்வர்ட் மன்னரின் துறவை நினைக்கையில் அவ்வளவு தீவிரமானதாக தோன்றவில்லை.

"காற்றிலேறியவ் விண்ணையும்
சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண்
பணியிலே"

என்றெல்லாம் சொன்ன பாரதியின் வாக்கு பலாது அறிவுக்கு புரியவே மாட்டாது. ஏனென்ருல் "காதலாவது உருளைக்கிழங்காவது" என்று கேட்கும்பேர்வழிகள் பெருத்துப் போன தேசமிது. "எடுத்தது கண்டார் இற்றது கேட்டார்" என்று கம்பன் வருணிக்கும் ராமனின் வீரச் செயலுக்கெல்லாம் இந்தக் காதல் சக்திதான் காரணம் என்று யார் உணரப்போகிருர்கள். காதலாவது மலையைத் தாண்டுவதாவது என்று தாட்சண்யமின்றி கம்மை கேலி செய்பவர் பலராவர். அவர்களுடைய மான ஸிகத்திலே ஜீவ சக்திகிடையாது. அது வறண்ட பாலைவனமாக இருக்கிறது. ஆகையினுல் காதற் பெண்களின் கடைக்கண் பணியின் பெருமை அவர்களுக்கு எப்படித் தெரியப் போகிறது.

* * *

ஆனல் எட்வர்ட் மன்னரின் துறவு காதல் சக்திக்கு ஒரு பெரிய எடுத்துக்காட்டாக இருக்குமென்பதில் ஐயமில்லை. மனிதனுல் செய்ய முடியாததை எல்லாம் செய்யவைக்கும் மாய மருந்தாக இருக்கும் இந்தக் காதலுக்கு எதிராக எதுவும் நிற்க முடியாது போலும்!

* * *

காதல் உணர்ச்சிக்கு இவ்வளவு மகாசக்தி இருக்கிறதென்பதை நமக்குச் சொல்லால் விளக்கிக் காட்டிய பெருமை பாரதிக்கும் செயலால் தெளிய வைத்த பெருமை எட்வர்ட் மன்னருக்கும் சொந்தம். அதிலும் உலகமெல்லாம் உணருமாறு செய்தாரல்லவா? அது இன்னும் சிறிது விசேஷந் தான்.

* * *

"காதல் வழிதான் காடுமுரடா மென்பர்" என்கிருர் பாரதி ஓரிடத்தில். ஆமாம் பாருங்களேன். ஒரு மஹாமன்னருக்குக்கூட எளிதாகஅனுபவிக்கமுடியவில்லை அந்தக்காதலை. ராஜ்யமும் சமூகச் சட்டங்களும் காதல் உணர்ச்சிக்குக் காடு முரடான பாதையாகத் தான் இருந்தன. எவ்வளவு இடைஞ்சல்கள்; எத்தனை குழப்பங்கள்; பட்டத்து ஆசை ஒரு பக்கம்; தாய் தந்தையர் சிபார்சு ஒரு பக்கம்; மந்திரி பிரதானிகளின் தொந்தரவு ஒரு பக்கம், பெரிய பதவி என்ற கௌரவ உணர்ச்சி ஒரு பக்கம், ஒரு பெண்ணுக்காக ஒரு தேசத்தையே இழக்கலாமா என்று யாராவது கேலி செய்தால் என்ன செய்வது என்ற சந்தேக உணர்ச்சி ஒரு பக்கம். இவ்வளவும் சேர்ந்து எட்வர்டை எவ்வளவு தொந்தரவு செய்திருக்குமென்று நினைக்கிறீர்கள்.

* * *

ஆனல் இந்தக் குழப்பங்களுக்கெல்லாம் பரிகாரமளிக்கக்கூடிய அருமருந்தல்லவா காதல்! "ஆஹா! பெரிய பதவி யல்லவா! இதையுமா இழப்பது என்று" என்று மனம் அயரும்போது காதலானது உள்ளத்திலே உயிருண்டாக்கும்—வீரமுண்டாக்கும் என்கிருர் பாரதி.

"காதலினுல் உயிர் தோன்றும்—இங்கு
காதலினுல் உயிர் வீரத்திலேறும்"

என்பதைக் கவனியுங்கள்.

அதுமட்டுமா? "காதலுக்கு கண்ணில்லை—அறிவில்லை—அது வரை மீறிக் காரியங்களைச் செய்யும்படி தூண்டும்—ராஜா பட்டத்தை விட்டது கூட அறிவோடு செய்த செய்கையல்ல" என்று யாராவது சொல்ல நினைத்தால் அவர்கள் ஜாக்கிரதையாக இருக்கட்டும்! காதலினுல் அறிவு கெடுவதில்லை. ஆனல் "காதலினுல் அறிவேய்தும்" என்று முன் கூட்டியே அவர் சொல்லி வைத்திருக்கிருர்.

* * *

கடைசியாக ஒரு வார்த்தை. சிம்சன் பெரிதா சிம்மாசனம் பெரிதா என்ற பிரச்னைக்கு மன்னர் உலகம் அதிசயிக்கப் பதில் அளித்துவிட்டார். ஸ்ரீமதி சிம்சனைக் காட்டிலும் சிம்மாசனம் எந்த விதத்திலும் உயர்ந்ததில்லை என்பதை மன்னர் நிரூபித்துவிட்டார். அவர் நீடூழி வாழ்க. பெரும் பாக்கியசாலியான ஸ்ரீமதி சிம்சன். வாழ்க

## விபசார விடுதி சோதனை

சென்னைப் போலீசார் டிசம்பர் 11உ மாலை வெங்கடாசலம் சந்திலுள்ள ஒரு வீட்டைச் சோதனைபோட்டனர். அவ்வீட்டில் விபசாரம் நடத்திவந்ததாகக் குற்றங்கூறி சேஷம்மாள் என்ற 40 வயது ஸ்திரீயைப் போலீசார் கைது செய்தனர். அவ்வீட்டிலிருந்த 4 இளம் பெண்களைப் போலீசார் விடுவித்தனர்.

## நோட்டீஸ்

தேவகோட்டை
டி. மு. கோர்ட்டு

S. C. No. 298 of 36.

சு. மெ. மு. மு. சுப. சுப்பிரமணியன் செட்டியார் } வாதி.

மு. பெருமாள் சேர்வை } பிரதிவாதி.

வாதி, பிரதிவாதி எழுதிக்கொடுத்திருக்கும் புரோநோட்டு துகையை வாப்பற்ற ஷை நிம்பாக செய்திருக்கும் பிருதுக்கு 9—1—37உ வாய்தா ஏற்பட்டிருக்கிற விபரம் இதனுல் அறிவித்திருக்கிறது.

S. லெக்ஷ்மிரதன்பாரதி,
அட்வகேட்,
தேவகோட்டை,
11—12—36.


ஜோதிஷம்.

ஒரு வருஷப் பலன் மாதவாரி எழுத ரூ. 3. வாராந்திர பலன் ரூ. 10. ஜாதக நகல் அல்லது கடிதம் எழுதும்போது ஜன்ம நேரம், முழுப்பெயர், சுமார் வயது தேவை.

ஹனுமான் ஜோதிஷ ஆச்ரமம்,
திருத்தணி, S. இந்தியா.



SEX-OL




ஊக்கத்துடனும் இளமையுடனிருக்க

செக்ஸால்

அதிகமாக பாராட்டப்பட்ட, நரம்புகளை முறுக்கேற்றும் டானிக் மருந்து. இழந்த ஆண் தன்மையை திரும்ப உண்டாக்கி முடியாதென்று கைவிடப்பட்ட நரம்பு சம்பந்தமான கஷ்டங்கள் ஆண்தன்மையின்மை, பலஹீனம், நரம்புத் தளர்ச்சி முதலிய வியாதிகளை போக்குகிறது.

செக்ஸால் திரும்பக் குமரனுக்குவது. திரேக வளர்ச்சிக்குறிய கிலாண்டுகளுக்குத் தேவையானவைகளை சப்ளை செய்கிறது.

செக்ஸால் உங்களுக்கு வாலிபத்தை உண்டாக்கி எப்பொழுதும் இளமை மாருமல் செய்கிறது. பரீக்ஷிக்க

| | | |
|---|---|---|
| 10 மாத்திரைக் கொண்ட பாட்டில் | ரூ. | 1-0-0 |
| 40 மாத்திரைக் கொண்ட பாட்டில் | ரூ. | 3-4-0 |
| 85 மாத்திரைக் கொண்ட பாட்டில் | ரூ. | 5-8-0 |

சோல் ஏஜண்டுகள்:—

Laxmi Das Dahyabhai & Co.,

Chemists & Druggists, 6, Princess Street, BOMBAY.



## மூத்திரப்பையைப் பாதுகாருங்கள்

### அதிக வேகமான மருந்துகளை உட்கொள்ளாதீர்கள்

உங்கள் மூத்திரப்பையில் ஒன்பது லக்ஷம் நுட்பமான சிறு குழாய்கள் இருக்கின்றன. அதிக வேக்காளமான கெட்ட மருந்துகளைச் சாப்பிட்டு கஷ்டமடையாதீர்கள். உங்கள் மூத்திரப்பை பலஹீனப்படுவதால் இரவில் தூக்கங் கெடுதல், கால்வலி, நரம்புவலி, சொரிசிரங்கு, வெட்டை வாய்வு, திமிர்பிடிப்பு, ஆண் தத்துவம் குறைதல் முதலிய கஷ்டங்கள் ஏற்படும். ஆகையால் தாமதிக்காமல் எங்கள் டாக்டரின் புதிய அபூர்வ சிஸ்டெக்ஸ் (CYSTEX) என்ற மருந்தைச் சாப்பிடுங்கள். சாப்பிட்டால் இது பலஹீனப்பட்டதும் கெட்டுப்போனதுமான மூத்திரப் பையைப் பலப்படுத்தி சுத்தப்படுத்துகிறது. 15 நிமிஷத்தில் குணம் தெரியலாம். திரேக சுகமும், ஆண் தத்துவமும் 48 மணி நேரத்தில் உண்டாக்குகிறது. இம்மருந்து விலை குறைவு. 8 நாளைக்குள் குணமில்லை என்று நிரூபித்தால் பணம் திருப்பிக் கொடுக்கப்படும். இம்மருந்து எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

## திருவிதாங்கூர் மஹாராஜா அவர்களின் சிறந்த ஔதாரியம்

(காளவனப் புலவர்)

இந்து மதத்திற் றீண்டாமை
பென்னுங் கொடுமைக் காற்ருராய்
உந்து பிறவாம் மதம்புகுந்தே
உய்ந்தோர் தமக்குங் கணக்குண்டோ
சிந்தை தெளியாக் குறையதனல்
சீர்கே டிழைத்த மனிதரெலாம்
நிந்தைக் கிலக்காய் நின்றதல்லால்
நேராம் புகழ்பெற் றுய்ந்தாரோ. (1)

காட்டி லுயர்ந்த ஜாதியினர்
நல்லோர் பெரியோர் பிறர்க்குவழி
காட்டி யிசைந்து வாழ்வதுதங்
கடனு மென்று கருதியன்றே
ஆட்டி யொதுக்கி ஹரிஜனத்தை
யடக்கி யாள எண்ணுவது
கேட்டில் வீழ்ந்து தங்களையே
கீழ்மைப் படுத்து முறையென்றுர் (2)

தீண்டாப் பறையன் நந்தனென்பான்
தீயில் மூழ்கி யெழுந்து நின்றுன்
சேண்டோய் மணிக்கோ புரவாயில்
சிற்றம் பலத்துஞ் சிறந்துநின்றுன்
நீண்டே கொழுந்து விட்டெரியும்
நெருப்பை வென்ற ஜாதியைப்போல்
பூண்டாள் புனித ஜாதியொன்று
புவியிற் காட்ட வேறுண்டோ. (3)

மண்ணு ருலகில் வலியிழந்த
மக்க ளாக வெகுகாலம்
புண்ணுப் நொந்து ஹரிஜனங்கள்
புலம்ப விருந்த புழுக்கமெலாந்
தண்ணு ரளிகொள் வஞ்சிஇறை
சமத்வ மீயத் தணியாதோ
கண்ணுற் கண்ட விண்ணுலகும்
களிப்பா லாசி மொழியாதோ. (4)

பூணு மூலகிற் செந்தண்மை
பூண்டோ ரந்த ணாளரென்றும்
நாணும் பஞ்ச பாதகங்கள்
நண்ணு வோர்சண் டாளனென்றுங்
காணச் சாதி பேதமின்றிக்
கடவுள் வாச லெல்லோர்க்கும்
பேணத் திறந்த சித்திரைநாட்
பெம்மான் என்றும் வாழியவே. (5)

## பட்டத்தைத்துறந்த செட்டியார்

வாலிபர் சங்கத்தில் பாராட்டு

1—12—36உ மாலை 6-30-மணிக்கு காரைக்குடி ஜில்லா தேசிய வாலிபர் சங்கக் கட்டிடத்தில் உபதலைவர் S. C. ராமசாமி அவர்கள் தலைமையில் மாதாந்த நிர்வாகிகள் கூட்டமொன்று நடைபெற்றது. அவ்வமயம் கீழ்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக தீர்மானிக்கப்பட்டன.

1. அக்டோபர், நவம்பர் மாதங்களின் சங்க வரவு செலவு கணக்குகளை காரியதரிசி பெரி. சின்னத்தம்பி அவர்களால் வாசித்து நாண்பித்து ஒப்புக் கொள்ளப்பட்டது.

2. சங்க மெம்பர்கள் காரியதரிசியோடு ஒத்துழைத்து சந்தா வசூலிப்பது.

3. தூத்துக்குடி தேசபக்தர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களின் மரணத்திற்கு இச் சங்கம் பெரிதும் வருந்துகிறது.

4. திருவாங்கூர் மகாராஜா அவர்கள் தமது அதிகாரத்துக்குட்பட்ட எல்லாக் கோவில்களிலும் ஹரிஜனங்கள் உள்பட எல்லா வகுப்பினரும் தாராளமாகச் சென்று வர அனுமதியளித்து ஹரிஜன இயக்கத்திற்கு ஆக்கமளித்ததை இச் சங்கம் பெரிதும் பாராட்டுகிறது.

5. தஞ்சாவூர் முனிஸிபல் மாஜி சேர்மனும், காரைக்குடி 'செட்டிநாடு' பத்திரிகையின் மானேஜிங் டைரக்டரும், சென்னை நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கக் கௌரவ காரியதரிசியும், பிரபல தனவணிகருமான ராவ்பகதூர் சு. அ. சு. ராம. ராமனாதன் செட்டியார் அவர்கள் தமது ராவ்பகதூர் பட்டத்தைத் துறந்து காங்கிரஸ் மகாசபையில் ஈடுபட்டதற்காக இச் சங்கத்தார் அவரது தியாக புத்தியைப் பெரிதும் பாராட்டுகிறார்கள்.




வளரும் குழந்தைகளுக்கு பிரத்தியேகமான சக்தி வேண்டியிருக்கிறது.

குழந்தைகள் பெரியவர்களைவிட ஓடுவதிலும் விளையாடுவதிலும் தங்கள் சக்தியை அதிகமாக செலவழிக்கிறார்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஒரு குழந்தை அதிகக் களைப்படைந்து சோர்வடையும் பொழுது அதன் சுகமான வளர்ச்சிக்கு அதிக சக்திவேண்டிய தேவை ஏற்படுகிறது; ஏனென்றால் அதனுடைய திரேகத்தில் ஊறும் சக்தியைவிட அதிகமாக செலவழித்து பலவீனத்தால் கஷ்டப்படுகிறது.

குழந்தைகளின் வளர்ச்சிக்கும் பிரத்தியேகமான சக்தி யேற்படுவதற்கும் தேவையான போஷாக்கு பொருள் ஹார்லிக்ஸில் கலந்திருக்கிறது. ஹார்லிக்ஸை இரவில் படுக்கைக்குப் போகும்பொழுதும் காலையிலும் கொடுத்துவந்தால் புதிய பலத்தையும் வீரியத்தையும் உண்டாக்குகிறது. மேலும் ருசிகரமாக இருக்கிறது.

ஹார்லிக்ஸ், மால்டட் பார்லி, கோதுமை இவற்றுடன் பூரா ஏடுடன் கூடிய பசும்பாலும் சேர்ந்த சிறந்த ஆகாரம். ஸ்டார்ச் இல்லாதது.

ஹார்லிக்ஸ் அசதி அணுகாமல் காப்பது

## அஹிம்சை பலாத்கார மாயிற்று

### தடியடிப் பிரயோகம்

(நமது நிருபர்)

காரைக்குடி, 14-12-36

சமீபத்தில் நடந்த ஜில்லாபோர்டு எலக்ஷன் சம்பந்தமாக இதுவரையில் காங்கிரஸ்காரர்கள் மட்டுமே பிரசாரம் செய்து வந்தனர். அதனால் கலகமெதுவும் ஏற்படுவதற்கு இடமில்லாமலிருந்தது. பள்ளத்தூர் சர்க்கிள் மறு எலக்ஷனுக்கு உத்தரவானபிறகு ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களும் பிரசாரம் செய்ய ஆரம்பித்தனர். இதனால் பொதுக் கூட்டங்களில் குழப்பங்கள் நடக்க ஆரம்பமாயின. பொதுக் கூட்டங்களில் கற்கள், சாணிகள் முதலியன வீசப்பெற்றன. ஒரு கட்சிக் கூட்டத்தில் மற்றகக்ஷி கூட்டத்தார் துண்டுப் பிரசுரங்கள் வினியோகித்தும், கேள்விகள் கேட்டும், தண்டோரா அடித்தும் இடையூறுகள் செய்தனர்.

டிசம்பர் 12உ யன்று பள்ளத்தூரில் இரு கட்சிக்காரர்களும் பலமாக குழப்பம் செய்ய ஆரம்பித்ததால் போலீஸார் கடுமையாகத் தலையிட்டுத் தடியடிப்பிரயோகம் செய்தனர்.

டிசம்பர், 14—

நேற்று காலை பள்ளத்தூர் மார்க்கமாக கூட்டமாகப் போய்க்கொண்டிருந்த 140 காங்கிரஸ் தொண்டர்களை, பள்ளத்தூரில் 12உ இரவில் காங்கிரஸ் கூட்டத்தில் சச்சரவு ஏற்பட்டதை உத்தேசித்து இவர்கள் அங்கு சென்றால் மேலும் சச்சரவுகள் அதிகமாகுமென நினைத்து சிவகங்கை உதவி போலீஸ் சூப்பிரண்டு ஸ்ரீமான் ராஜரெத்தின முதலியாரவர்கள் டி தொண்டர்களை இ. பி. கோ. 151 ன்படி அரஸ்டு செய்து காரைக்குடி ஸ்டேஷனில் அடைத்துவைத்திருந்தார். அவர்களில் 38 தொண்டர்கள் சிறுபையன்களாக விருந்ததால் அவர்கள் வெளியில் விடப்பட்டனர். இந்த அரஸ்டை கண்டிக்கு முகத்தான் நேற்றுமாலை 3 மணி முதல் 5-30 மணிவரை காரைக்குடி போலீஸ்டேஷன் முன்பு நூற்றுக்கணக்கான ஜனங்கள் திரளாகக் கூடி போலீஸ் உத்தியோகஸ்தர்களையும், தொண்டர்கள் அரஸ்டு செய்யப்பட்டதையும், செட்டிநாடு ராஜா அவர்களையும் கண்டித்து, அண்ணாமலைக்கு அரோகரா, என்று கத்தி மண்ணைவாரி இறைத்து ஆரவாரம் செய்து கொண்டிருந்தனர்—ஜனங்கள் வரவர போலீஸ் ஸ்டேஷனை சமீபிக்கவே, நிலமை மேலதிகாரிகளுக்குத் தெரிவிக்கப்பட்டது. டிபுடி போலீஸ் சூப்பிரண்டு, ஜில்லா போலீஸ் சூப்பிரண்டு, சர்க்கிள் இன்ஸ்பெக்டர் தேவகோட்டை சப்கலெக்டர் ஆகியவர்கள், ஸ்தலத்திற்கு வந்து பொதுமக்களை கலைந்து போகும்படி எச்சரிக்கை செய்தனர். ஜனங்கள், அதிகாரிகளின் எச்சரிக்கையை லக்ஷியம் செய்யாமல் மேலும் ஆரவாரம் செய்து, கற்களையும் மண்ணையும் வாரி மேலும் மேலும் எறிந்தனர். ஜில்லா போலீஸ் சூப்பிரண்டு காரிலும் கற்கள் எறியப்பட்டன. நிலைமை சமாளிக்க முடியாமலிருக்கும் சமயம் வந்ததும் சூப்பிரண்டு தடியடிப் பிரயோகம் செய்ய உத்திரவிட்டனர். கூட்டம் சிறிது நேரத்திற்குள் நாலா பக்கங்களில் கலைந்து மறைந்தது. தடியடிப் பிரயோகத்தால் இரண்டு பேர்களுக்கு பலமான காயமும் மற்றும் சிலருக்கு சொல்பமான காயமு மேற்பட்டிருக்கின்றது. அடிபட்டவர்கள் ஆஸ்பத்திரிக்கு எடுத்து செல்லப்பட்டு சிகிச்சை செய்யப்பட்டனர்.

இ. பி. கோ. 151 ன்படி அரஸ்டு செய்யப்பட்ட 102 தொண்டர்களும் இன்று காலை திருப்பத்தூர் தாலூகா மாஜிஸ்ட்ரேட் அவர்களால் காவலில் வைக்கப்பட்டிருக்கின்றனர்.

## அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

பள்ளத்தூர் திருவாளர் ச. பெரி. இராமசாமியவர்கள் (5-வது Hons. வகுப்பு) அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் பொதுப் பேரவைக்குப் (Annamalai University Union) போட்டியின்றி மூன்றும் பருவத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். இவ்வாறு ஒரு அங்கத்தினர் போட்டியின்றித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெறுவது, இதுவே முதல்முறையாகும்.



(6-ம் பக்கத் தொடர்ச்சி)

நீண்ட நாள் அனேக வருடங்கள் தவணையுள்ள கடன்கள் இப்பேங்குகள் தான் கொடுக்கமுடியும். பர்மா கவர்ன்மெண்டில் இவ்வித பேங்குகள் ஆரம்பிப்பதற்கு முயற்சி செய்துவருவதை வரவேற்கிறோம். எனினும் எந்த இயக்கமும்மேலேயிருந்துவருவதில் பிரயோசனமில்லை; பொதுமக்கள் ஆர்வமுற்று ஆரம்பிப்பதால்தான் சீக்கிரம் பலன் தரும். ஆதலால் கூடியவிரைவில் நாட்டுப்பற்றும் தொழில் அனுபவமும் உள்ள சகோதரர்கள் கூட்டுறவுமுறையில் நிலமார்ட்கேஜ் பேங்குகள் ஆரம்பிக்க முயலுவது நல்லது.

### சர்க்கார் பண உதவி.

1884-ம் வருடத்து விவசாயிகள் கடன் சட்டத்தை சென்னை மாகாணத்தில் திருத்தி அமைத்துள்ளார்கள். கடன் சமரச போர்டார் தீர்த்துவைக்கும் கணக்குகளுக்கு இனம் ஒன்றுக்கு இரண்டாயிரம் ரூபாய் வரை, இச் சட்டத்தின் கீழ் சர்க்காரிலிருந்து பணம் கடன் தந்து விவசாயிகட்கு உதவுகிறார்கள். இந் நாட்டிலும் சமரச போர்டுகள் இப்பொழுது நிறுவுவதால், சமரசம் செய்யப்பட்ட கடன்களுக்கு சர்க்காரில் பணம் தந்து உதவுவது அவசியமாகும். ரொக்கப் பண வசதியிருந்தால்தான் சமரசம் வெற்றியாக முடிவதற்கு ஹேதுஉண்டு.

### பர்மா நிலச் சேவா சட்டம்.

சென்ற ஆகஸ்டு மாதம் கூடிய பர்மா சட்டசபையைத் திறந்து வைத்தபோது மேன்மைதங்கிய கவர்னரவர்கள் பர்மாவைப் பற்றிய தங்கள் பொது அபிப்பிராயங்களையும், தமது அரசாட்சி எடுத்துக்கொள்ள உத்தேசித்திருக்கும் சட்ட திட்டங்களைக் குறித்தும் சொன்னார்கள். முதலாவதாகக் கல்வி விஷயங்களையும் பொதுஜன சுகாதார விஷயங்களைக் குறித்தும் தெரிவித்த பிறகு, சிக்கலான நில உரிமை, அனுபவம், சாகுபடி சொந்தம் முதலிய விஷயங்களைப்பற்றியும் சொன்னார்கள். அவர்கள் பொதுவான அபிப்பிராயம் பர்மாவில் அதிலும் லோயர் பர்மாவில் சாகுபடிசெய்யக்கூடிய நிலங்களில் அதிகமான பங்கு நிலங்கள் நேரே தாமே சாகுபடிசெய்யாதவர்களிடம் போய் சேர்ந்திருக்கின்றனவென்பது. அதைத் தடுப்பதற்கோ அல்லது மாற்றுவதற்கோ சடுதியில் முயற்சிசெய்வது அதிககஷ்டமானதும் பலவிதமான சங்கடங்களுக்கிடமானதாயிருக்கலாமென்றும், அந்த நிலங்களை சாகுபடி செய்வோருக்குத் திருப்பித்தருவது சாத்தியமானதில்லை யென்றும் தெரிவித்தார்கள். அப்படி நிலங்கள் திரும்பிவருவதும் மெதுவாகத்தான் சாத்தியமாகுமென்பதும் அவர்கள் அபிப்பிராயம்.

### கூப்பர் மசோதா

ஆனால் நிலங்களைப் பொருத்தவரையில், நிலச் சுவான்தாரர்களுக்கும் சாகுபடி செய்வோருக்கு மிடையேயுள்ள உரிமை சுதந்தரங்களை கவனிக்கக் கூடுமென்றும் இது விஷயமாய் சட்டங்கள் அவசியமென்றும், ஆனால் பிற நாட்டிலுள்ள இதுபோன்ற சட்டங்கள் அனுபவத்தில் கொண்டு வந்திருப்பதில் விளைந்தவைகளை யுத்தேசித்தால் எதிர்பாரத சில சம்பவங்கள் நேரக்கூடு மென்று தோன்றுவதாகவும், நிலஞ் சேவா பயிர் செய்வது விஷயமான சட்டங்கள் வெகு ஜாக்கிரதையோடு கொண்டுவரப்பட வேணடுமென்றும் அபிப்பிராயப்பட்டார்கள். முன் 1927-ம் வருஷத்தில் கூப்பர் மசோதா (இது விஷயமாய்க் கொண்டு வரப்பட்டது) சட்டமாக்கப்படவில்லை யென்றாலும், அந்த மசோதாவையே இப்போதுள்ள பர்மாவின் நிலைமைக் கேற்றாற்போல் ஏன் மாற்றித் திருப்பவும் கொண்டுவரக் கூடாதென்று யோசிப்பதாகவும் தெரிவித்தார்கள்.

முந்திய கூப்பர் மசோதா கொண்டுவரப்பட்டதற்கு முக்கிய காரணங்களாகக் கூறப்பட்டவை சாகுபடியாகக் கூடிய நிலங்களில் சில பாகம் விவசாயிகளல்லாத வரிடம் வந்து சேர்ந்துவிட்டதாயும், அன்னார் தங்கள் நிலங்களுக்குப் போட்டியின்பேரில் அதிகமான சேவா தருபவருக்கே பயிரிடக் கொடுக்கப்படுவதாகவும், அவ்விதம் அதிகமான சேவா கொடுத்தாலும் ஒரு வருஷத்திற்கு மேற்பட்ட காலத்திற்கு நிலம் பயிரிட ஒப்புவிக்கப்படுவதில்லை யென்றும், சேவாவுக்குப் பயிரிடுவோரிலும் சிலர் மோசம் செய்வோரும் புரட்டுச் செய்வோருமா யிருக்கிறார்களென்றும், நிலச்சுவான்தாரர்கள் தங்கள் சேவா மட்டுமல்லாமல் தாங்கள் பயிரிடத் தந்த பணத்தையும் திருப்பித் தரப்படாமல் ஏமாற்றப்படுகிறார்களென்றும், இவைகளை எல்லாம் தடுக்கவே இந்தச் சட்டம் அவசியமென்றும் சொல்லப்பட்டது, இவ்வித காரணங்களுக்காகக் கொண்டுவரப்பட்ட கூப்பர் மசோதா சட்டமாக்கப்படாமல் தள்ளிவைக்கப்பட்டது. மசோதா கொண்டுவருவதற்கு முன் தேவையான விசாரணைகள் நடத்தப்பட்டே வந்திருக்க வேண்டும். 1927-ம் வருஷத்தில் கூப்பர் மசோதா அவசியமில்லை யென்று தீர்மானிக்கப்பட்டால், இப்போது அவ்வித சட்டத்திற்கு அவசியமுண்டென்று எனக்குத் தோன்றவில்லை. ஆனால் கவர்னரவர்கள் கூறியதில் கூப்பர் மசோதாவை மாற்றியும் திருத்தியும் கொண்டுவர உத்தேசிப்பதாகத்தான் கூறினர். எனவே எந்த விதத்தில் மாற்றியும் திருத்தியும் கொண்டுவரப்படு மென்பது தெள்ளிதிற் புலப்பட வில்லை.

சாதாரணமாக நிலச்சேவா பயிரிடும் விஷயமாய் சட்டங்கள் நிலச்சுவான்தார்கள் சேவாக்காரருக்குக் கஷ்டமுண்டாகும் வகையில் அதிகமான ஊதியமடையாதபடியும், சேவாக்காரர்கள் நிலச்சுவான்தார்களுக்கு நியாயமாய்க் கொடுக்க வேண்டிய சேவாவைக் கொடுக்காமல் ஏமாற்றிப் போகாதபடியும் காக்க வேண்டும். ஒப்புக்கொண்டபடி நியாயமான சேவாவைக் கொடுத்துக் கொண்டுவரும் சேவாக்காரன் சரியானபடி பயிரிடும் காலம் வரையில் நிலத்தை விட்டு அப்புறப்படுத்தப் படாமலிருக்க வேண்டும். இந்த இரண்டு விஷயங்களும் அதிகம் முக்கியமானவை. இந்த விஷயங்களைப் பொறுத்தவரையில் என்விசாரணையிலும்அனுபவத்திலும் மீறி நடக்கும் நிலச்சுவான்தாராவது சேவாக்காராவது அதிகமாகக் கிடையாது. அங்கங்கே சிற்சில இடங்களில் ஒன்றிரண்டு நிலச்சுவான்தாரர்கள் சேவாக்காரரைக் கஷ்டப்படுத்தி ஊதியமடையலாம். அதேபோல் சேவாக்காரரும் தங்கள் நிலச் சொந்தக்காரர்களை ஏமாற்றி செலவு பணத்தையும் சேவா நெல்லையும் கொடுக்காமல் எடுத்துப் போகலாம். இவ்விதமாக ஏற்படும், அல்லது இருக்கும் ஒன்றிரண்டு நடத்தைகளுக்காக ஓர் சட்டம் கொண்டுவர அவசியமிராது. பொதுவாக பர்மாவில் இப்போது நிலஞ் சேவா பயிர் செய்யும் விஷயமாய் சட்டம் கொண்டுவர முன் 1927-ம் வருஷத்திலாவது, அதற்குப் பிந்தியாவது இப்போதாவது போதிய காரணமிருப்பதாகத் தெரியவில்லை.

### நாணயப் பரிவர்த்தனை

உலகத்தில் பல நாடுகள் தங்கள் நாணயங்களின் மதிப்பைக் குறைத்து விட்டன வென்பதை நீங்களறிவீர்கள். சமீபத்தில் பிரான்சு சுவிட்சர்லந்து, ஹாலந்து முதலிய தேசங்களும் தங்கத் திட்டத்திலிருந்து விலகி விட்டன. பிரான்சு, இங்கிலாந்து அமெரிக்கா மூன்று தேசங்களும் பரிவர்த்தனை விகிதத்தைக் காப்பதற்காக ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறது. இந்நிலையில் இந்தியாவின் பரிவர்த்தனை விகிதம் இந்தியாவின் நன்மைக்குப் பாதகமாயிருக்கிறதென்று பொதுமக்கள் ஏகமனதாய் அபிப்பிராயப்படுவதை சர்க்கார் ஏற்றுக் கொள்ள மறுதலித்து வந்திருக்கின்றனர். இந்தியா சட்டசபையில் இதுபற்றி வந்த தீர்மானங்களின் கதியை நீங்களறிவீர்கள். இங்கிலாந்து தங்கத் திட்டத்திலிருந்து விலகிய கால முதல் ஏறக்குறைய முன்னூறு கோடி ரூபாய் மதிப்புள்ள தங்கம் வெளிநாட்டுக்கு ஏற்றுமதியாகியிருக்கிறது. உலகத்தின் தங்கச் சேமிப்பு அதிகம் வைத்துக் கொண்டிருக்கிற அமெரிக்கா, பிரான்சு இங்கிலாந்து முதலிய நாடுகளே தங்கம் வெளிநாடுகட்குச் செல்வதைத் தடை செய்யும் பொழுது ஏழை இந்தியாவின் உயிர் ரத்தமாகிய தம் நாணயத் திட்டத்திற்கு அடிப்படையானதுமான தங்கம் தங்கு தடையின்றி ஏற்றுமதியாய்க்கொண்டு வருவதைத் தடைசெய்யாமல் பார்த்துவருவது நமதுநாட்டின் நன்மைக்கு ஏற்றதல்ல. அத்துடன் இந்த தங்க ஏற்றுமதி இல்லாவிட்டால் ரூபாய்க்கு சர்க்காரால் நிறுவப்பட்டுள்ள பதினெட்டு பென்ஸ் பரிவர்த்தனை விகிதத்தைக்கொண்டு செலுத்தமுடியாது. ரூபாயின் மதிப்பைக் குறைத்து அதன் மூலம் இந்தியாவின் விளைபொருள்களின் விலையை உயர்த்துவது விவசாயிகளுக்கும் இந்திய மக்களனைவருக்கும் நன்மையைத் தரும். சீமையிலுள்ள மாஸ்டர் காட்டன் ஸ்பின்னர்ஸ் அசோஸியேஷன்காரர்களே இப்பொழுதுள்ள பரிவர்த்தனை விகிதத்தால் இந்திய விவசாயிகள் கஷ்டமடைந்து வருகிறார்களென்றும், ரூபாயின் மதிப்பைக் குறைத்து இந்திய விவசாயிகளின் வருமானத்தை அதிகப்படுத்தவேண்டும் என்றும் சொல்லியிருக்கிறார்களென்றால் இன்னும் சர்க்கார் இவ் விஷயத்தில் பிடிவாதமாயிருப்பது உசிதமில்லை. ஆதலால் தங்கம் வெளிநாட்டுக்குச் செல்வதைத் தடுத்து ரிசர்வ் பேங்கார் பஜார் விலையில் தங்கத்தைவாங்கிச் சேமிக்க வேண்டும். தேச நன்மைக்கான முறையில் ரூபாயின் பரிவர்த்தனை விகிதத்தை நிர்ணயிப்பதற்கு ராயல் கமிஷன் ஏற்படுத்தி சீக்கிரமாய் ஒரு முடிவுக்கு வரவேண்டும்.

உலகப் பொருளாதார நெருக்கடியினால் நம்மவர்களின் தொழில் முறை ரொம்பப் பாதிக்கப்பட்டிருக்கிறதென்பது நாம் நன்கு அறிந்த உண்மை. ஆயினும் இந்நெருக்கடியினால், நம்மவர்க்கும் நம் தாய்நாட்டிற்கும் மறைமுகமான பல நன்மைகள் ஏற்பட்டு வருகின்றன வென்று நான் உறுதியாக நம்புகிறேன். இதுவரை நம்மவர்கள் பெரும்பாலும் லேவாதேவித் தொழிலிலேயே ஈடுபட்டிருந்தார்கள். ஒருதேசப் பொருளாதார விஷயத்தில் மாறுதல்களோ நெருக்கடியோ ஏற்படுமானால் அது முதன் முதலாக லேவாதேவித் தொழிலையே பெரிதும் பாதிக்கும். இதன் உண்மையை நாம் இப்பொழுது ஏற்பட்ட உலகப் பொருளாதார நெருக்கடியால் நன்கு அறிந்துகொண்டிருக்கிறோம். அவ் வுண்மையை நம்மவர்கள் இப்பொழுது நன்கு தெரிந்துகொண்டு சமூகம் முழுதும் ஒரே தொழிலில் ஈடுபட்டிருப்பதை விடுத்து தற்பொழுது பல துறைகளிலும் ஈடுபட்டு வருகிறார்கள். இது ஒரு நற்குறியும் போற்றற்குரிய விஷயமுமாகும்.

மேலும் இதுவரை நம்மவர்களின் தொழில் பெரிதும் அந்நிய நாடுகளிலே நடைபெற்றது. நம் பெரும் பொருளுதவியால் நாம் அநேக நாடுகளை செழிப்புறச் செய்திருக்கிறோம். அப்படியிருந்தும் இப்பொழுது உலகில் தோன்றியிருக்கும் தேசிய உணர்ச்சியால் நம்மவர்களை அயல் நாட்டாரென்றும், நாம் நம் சொந்த நன்மை ஒன்றைக் கருதியே அந்நாடுகளில் தொழில் செய்வதாகக் கருதியும் பிரசாரம் செய்தும், சட்டதிட்டங்களின் மூலமும் வேறு மார்க்கங்களிலும், நம்மவர்கள் தொழிலுக்கு இடுக்கண்கள் செய்ய முயற்சி செய்து கொண்டு வருகிறார்கள். இதை அறிந்த நம் சமூக அறிவாளிகளிற் பலர் இப்பொழுது நம் பெரும் பொருளில் ஒரு பகுதியை நம் தாய்நாட்டில் தொழில் அபிவிருத்தியில் உபயோகிக்க முற்பட்டிருக்கிறார்கள். உதாரணமாக நம் தென்னிந்தியாவில் இப்பொழுது நம்மவர்கள் ஏற்படுத்திவரும் பாங்குகள்; இன்வெஸ்ட்டு மெண்டு டிரஸ்டுகள் புரோக்கர் நிலையங்கள் முதலிய கூட்டுறவு நிலையங்களும் பஞ்சு ஆலைகள் மின்சார உற்பத்திசாலைகள் கரும்பாலைகள், பேப்பர் ஆலைகள் சிமிந்தி உற்பத்திசாலைகள் முதலிய தொழிற்சாலைகளும் இதற்கு சான்றாகும். இத்துறையில் நம்மவர்கள் இன்னும் பெரும் ஊக்கத்துடன் ஈடுபட்டு நம் பொருளில் பெரும் பகுதியை நம் தாய்நாட்டுத் தொழில் அபிவிருத்திக்கு உபயோகித்து தேச சேவை செய்வது பெரிதும் விரும்பத்தக்கதாகவும், இப்பொழுது ஏற்பட்டிருக்கும் இப்புத்துணர்ச்சியை நாம் சந்தோஷமாக வரவேற்று அதை இன்னும் சீரிய வழியில் நடத்த முயலுதல் வேண்டும்.

ஆனால் இப்புதுத் தொழிலில் ஈடுபடும் நாம் கொஞ்சம் ஜாக்கிரதையாகச் செல்ல வேண்டுமென்று நான் கருதுகிறேன். புதுக் கூட்டுறவு நிலயங்கள் தொழிற்சாலைகளில் பங்கெடுத்துக் கொள்ளுமுன் அதன் நிர்வாகஸ்தர்களின் யோக்கியதை பொருப்பு இவைகளை நன்கு ஆராய்ந்து நம் பணத்தை கொடுத்து உதவுதல் வேண்டும்.

இன்னும் நம்மவர்கள் தொழில் செய்யும் அயல்நாடுகளில் இப்பொழுது செய்வது போல் தனி நபர்களோ அல்லது ஒருசிலரோ கூடித் தொழில் செய்வதிலும் நம் பழமையான லேவாதேவித் தொழிலைக் கூட்டுறவு பாங்குகள் அங்கங்கு போதிய மூலதனத்துடன் நிறுவி நடத்திவருதல் பெரிதும்பொருத்தமுடையதாகும். நகரத்தார்கள் முயன்று சீக்கிரம் ஆங்காங்கு பாங்குகள் நிறுவவேண்டுமென்று நான் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். புதுத் தொழில்களின் வேகத்தில் நம் பழம் தொழிலாகிய லேவாதேவியை அலட்சியம் செய்துவிடாதேயுங்கள். பழந் தொழிலை காலத்திற்கேற்றவாறு திருத்தி நடத்தவேண்டும்.

இரண்டொரு வார்த்தைகளோடு எனது பிரசங்கத்தை முடித்துவிடுகிறேன். நான் ஆரம்பத்தில் சொல்லியவாறு இந்நாட்டு கலனைக் குறிக்கோளாகக் கொண்டும், நமது நியாயமான உரிமைகளுக்கு பாதகமில்லாமலும், இங்குள்ள பொது மக்களோடு ஒத்துழைப்பது நமது கடமையாகும். நமது சங்கத்தைப் பல வழிகளில் பலப்படுத்த வேண்டும். நகரத்தார்கள் ஆரம்பிக்கும் எந்த ஸ்தாபனத்திற்கும் முற்கூட்டியே பணவலிமை ஏற்படுத்திவைப்பது மரபு; ஆனால் பல வழிகளில் நம்மவர் நலனுக்கு உழைத்துவரும் நமது சங்கத்திற்குப் போதிய நிதி திரட்டிவைக்கவில்லை. அன்பர்கள் அவ்விஷயத்தை ஆலோசனை செய்யுமாறு கோருகிறேன்.

## அகில பர்மா செட்டியார்கள் மகாநாடு

### அயல்நாடுகளில் நம்மவர் நிலைமை

### உள்நாட்டுத் தொழிலை உயர்த்துதல் வேண்டும்

மூல வியாதியை பூருவும் குணப்படுத்துகிறது.

ஹாடென்ஸா

எப்பேர்ப்பட்ட மூலமாயினும்சரி இரத்தம்வடிதலை நிறுத்தி குணப்படுத்துகிறது. உலகப் பிரசித்தமான டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் உபயோகிக்கப் பட்டு சிபார்சு செய்யப்பட்டது. மூலம் முதலிய வியாதிகட்கு சிறந்ததும், வெகு சீக்கிரத்தில் குணப்படுத்துவதுமானமருந்து இது ஒன்றுதான். ஆபரேஷன் தேவை இல்லை.




உங்களூர் மருந்து வியாபாரிகளிடமிருந்து வாங்குங்கள்.





CHEAPEST RATE
VALUE BACK IF DISAPPROVED
DECENT, STRONG, ACCURATE & STYLISH WATCHES GTD 3 YEARS. ROUND NICKEL 2/14/-, RADIUM DIAL 3/12/-; GOLDEN 3/14/-. SQUARE NICKEL 4/6/-, GOLDEN 4/14/-. RECTANGULAR NICKEL 5/4/-, GOLDEN 6/-. VERY SMALL ROUND NICKEL 5/-, GOLDEN 5/8/-. POSTAGE 7/-.
... FREE ON 3. G.T.Co. 165 HARRISON Rd. CALCUTTA

எனதாசை நிறைவேறியது. அந்த வகையில் நான் பெரும் பாக்கியசாலி தான். அதுதான் யான் விரும்பியவிதம் காமு எனது வாழ்க்கைத் துணைவியான தாகும்.

எங்கள் மனம் ஒன்றிவிட்டது! கருத்தே ஒன்றிவிட்டது! உயிரே ஒன்றிவிட்டது! அதுதான் எங்கள் வாழ்க்கையில் இன்பம் மலருவதற்குக் காரணம்.

என் துணைவி வாழ்க்கையில் மிகவும் கவனமுள்ளவள். அதில் எங்காவது கோணல் மாணலிருந்தால் அதை உடனே கண்டுபிடித்துச் சீர்பெற அமைத்துவிடுவாள். எங்கள் வாழ்க்கை சரியான நேர் வழியில் செல்லுவதற்குக் காரணமுழுவதும் அவள்தான்.

எங்கள் வாழ்க்கை படாடோபமற்றது; ஆகவே கட்டுச் செட்டானது. நம் நாட்டு மற்றப் பெண்களைப்போல் போனால் வாராது என்று நினைத்து நூற்றுக்கணக்கில் சேலைகளை வாரிக்கட்டி பெட்டகத்தில் பூட்டிவைக்கமாட்டாள். அதுவுமன்னியில் ஆடம்பரமான சேலைகளையும் வாங்கப் பிரியப்படாள். அதிக பணத்தை அள்ளிக்கொண்டு போகும் ஜரிகைச் சேலைகளால் உபயோகமில்லை என்பது அவளது திடமான நம்பிக்கை. நீடித்து உழைக்கக்கூடியதும் தினம் தோய்த்து உடுத்தக்கூடியதும் குறைந்த விலையிலுள்ள சாதாரண நாட்டுச் சேலைகளிலேதான் அவளுக்குப் பிரீதி.

நகைகள் அணியும் விஷயத்திலும் கண்டிப்பானவள். "எதற்காக ஐயாயிரம் பதினாயிரத்திற்கு வைர நகைகளைச் செய்து சுமைதாங்கி போன்று நம்முடலில் தூக்கித் திரியவேண்டும்? அதெல்லாம் வீண் பகிசு! அப்பணத்தை வேறோர் நல்வழியில் உபயோகித்தால் எவ்வளவு நன்மையடையலாம்! சிறிது செயற்கை அழகும் வேண்டுமானால் ஏதோ குறிப்பிட்ட இரண்டொரு நகைகள் போதாதா? இன்னின்ன இடத்தில் தான் நகை அணிவதென்பதில்லாது

# என் காமு.

"சாமு"

உடல் முழுதும் கண்டவிடமெல்லாம் அணிவதால் அதற்கு மதிப்புத்தான் ஏது?" எனக் கூறத் தயங்கமாட்டாள்.

எங்கள் வீட்டில் அததது அதனதனிடத்தில் ஒழுங்காய் வைக்கப்பெற்று பார்ப்பதற்கு அழகாய் இருப்பதற்குக் காரணம் அவள்தான். வீட்டினுள் அசுத்தம் என்ற அரக்கன் குடிபுகுந்துவிடாது மிகுந்த கவனமுடனிருப்பாள். வீட்டிலுள்ள ஒவ்வொருவரும் தினம் சுத்தமான புதிய ஆடை புனையவேண்டுமென்பது அவளது கண்டிப்பான போதனையாகும்.

மிகவும் சுறுசுறுப்பானவள். வேலையற்ற நேரங்களிலும் வீண் பொழுது கழிப்பதில்லை. எங்கள் வீட்டின் கதவு வழிகளில் தொங்கும் பூத்திரைகள், ஜன்னல் திரைகள், மேஜைகளின்மீது விரித்திருக்கும் சித்திர வேலைப்பாடுடன் கூடிய விரிப்புகள் அனைத்தும் என் காமுவின் கைத்திறனைக் குறிப்பனவே! தன் தையல் மெஷின் உதவிகொண்டு தனக்கு வேண்டியவற்றை அவளே தைத்துக்கொள்ளுவாள். நான் அணியும் சட்டைகளும் அவள் திருக்கரத்தின் வேலைதான். எனது சட்டைப் பையில் எட்டிப்பார்த்துக்கொண்டிருக்கும் அந்தக் கைக்குட்டையும் அவளால் சிருஷ்டிக்கப்பெற்றதுதான்! என் சாமுவின் தையல்வேலை நீடித்துழைக்கும் உறுதியும் நல்ல அழகிய வேலைத்திறனும் கூடியதென யான் கூறுவது மிகையாகும். குடும்பத்திற்கு வேண்டிய இலேசான தையல் வேலை முழுதும் அவளே தயாரித்துக்கொடுக்கிறாள். இந்த வழியில் எங்கள் செலவும் குறைவதோடு, அவளுக்குப் பொழுதும் உபயோகமுள்ள முறையில் கழிகிறது.

சிக்கலான விஷயங்களைப்பற்றி ஒரு முடிவிற்கும் வரமுடியாது என் மூளையைக் குழப்பிக்கொண்டிருப்பேன். அவ்விதசந்தர்ப்பங்களில் என் காமு தகுந்த யோசனை கூறுவாள். சில சமயங்களில் அவள் கூறும் சமயோசித யோசனைகள் எனக்குக்கூட உண்டாவதில்லை.

அக்கம்பக்க வீட்டிலுள்ளவர்கள் காதலற்ற—ஒற்றுமையற்ற வாழ்க்கை வாழ்வதைக் கண்டு அதை என்னிடம் கூறி வருந்துவாள். "ஆனால் நாம் அவ்வித முரட்டு வாழ்க்கையினின்று தப்பிவிட்டோம்" எனக்கூறி ஆனந்தமேலிட்டால் என்னை முத்தமிடுவாள்.

அவளது மனம் கள்ளங் கபடற்ற குழந்தையுடையதாகும். எப்பொழுதும் அவளது முகத்திலிருந்து புன்னகை விலகுவதேயில்லை. சிறு பிள்ளைபோல் ஆடிப் பாடிக் குதூகலிப்பாள்.

என்னைப் பிரிந்திருக்கச் சகிக்கமாட்டாள். நான் வெளியே போகும் சமயமெல்லாம் சீக்கிரம் வந்துவிடும்படி ஞாபகமூட்டுவாள். நான் வரவேண்டிய நேரமறிந்து என் வருகைக்குக் காத்திருப்பாள். நான் வரத் தாமதித்துவிட்டால் அவள் படும் வேதனை சொல்லி முடியாது! அவளுக்கு வேறொன்றிலும் கருத்துச் செல்லாது! தன் உயிரைப் பிரிந்துவிட்டதேபோன்று தவிப்பாள். அப்படி நான் தாமதித்து வந்ததும் சிறிது கோபமுடன் காரணம்கேட்பாள். அதெல்லாம் என்பால் அவளுக்குள்ள பேரன்பால் ஏற்படுவதுதானே!

நான் ஏதாவது எழுதிக்கொண்டிருப்பதைக்கண்டு "ஏன் உங்களையே சிரமப்படுத்திக் கொள்ளுகிறீர்கள்! நீங்கள் சொல்லுங்கள் நானெழுதுகிறேன்" எனப் பக்கத்தில் வந்து அமர்ந்துகொள்ளுவாள். நான் அதற்குச் சம்மதித்தாலொழிய அவள் மனம் ஆறாது.

காமு வீணையை யெடுத்து சுருதி கூட்டி பாரதி பாடலைப்பாட ஆரம்பித்துவிட்டால் தெய்வீக கானவிருந்தாயிருக்கும். நேரம் கழிவதும் தோன்றாது! பசியும் மறைந்துபோய்விடும்! வீணையின் நாதமும் அவளின் இனிய சாரீரமும் ஒன்றையொன்று போட்டியிடும்! பாரதியாரும் என் காமுவுக்காகவே தான் பாடல்கள் இயற்றியிருக்கவேண்டுமென வெண்ணிப் பரவசமாவேன்.

என் காமுவால்தான் குடும்ப வாழ்க்கையில் எனக்குஅலுப்பேற்படுவதற்குப் பதில் விருப்பு அதிகரித்து வருகிறது. ஏனென்றால் குடும்ப பாரம் முழுதும் என்னைச் சாரவில்லையல்லவா? அதுதவிர வாழ்க்கையில் ஓர் தனி இன்பப் பெருக்கை உண்டுபண்ணும் அற்புத சக்தி வாய்க்கப்பெற்றிருக்கிறாள் காமு. இனி எனக்கொரு குறைவுமில்லை! காமுவே எனக்குவேண்டியது! அவளே என் உயிர்! அவளுக்கிணையாக இவ்வுலகில் எதையும் கூறத் துணியமாட்டேன்!

என்னைப்போன்று இவ்வித பாக்கியம் பெற்றவர்கள் நம் நாட்டில் வெகு துர்லபம். எனினும் ஒவ்வொருவரும் தம் சொந்த முயற்சியால் இந்தப் பாக்கியம் பெற முடியுமென்பது எனது உறுதி. தம் வாழ்க்கையில் இன்பம் உண்டாக்கிக்கொள்வது எவராலும் முடியாத காரியமன்று. ஆனால் இதைப்பற்றி அவர்கள் சிந்திப்பதேயில்லை! ஆகவே நாமே உற்பத்தி செய்துகொள்ளும் துன்பத்திற்கு எதையும் குறைகூறிப் பயனில்லை.


தாதுபுஷ்டியில்மன்மதனுக்கு ஒப்பாவீர்கள்.

நீங்கள் என்றுமழியாத இளமைப் பருவத்தை அடையவேண்டுமானால் பழனி ஆர். எம். கே.

தங்க பஸ்பம் நரசிங்க லேகியத்தில் சாப்பிடுங்கள்

## த ங் க ப ஸ் ப ம்

தாதுபுஷ்டிக்கு இதற்கு நிகரான மருந்து ஒன்றுமேயில்லை.

இது பிரபுக்கள் சாப்பிடவேண்டிய மருந்து. மற்றவர் சாப்பிட்டு தாங்க முடியாது.

ஒரே வேளையில் கொடுக்கும் பலனைப் பார்த்தால் உங்கள் மனதை அப்படியே கவரச் செய்துவிடுகிறது.

தாதுபுஷ்டியில் மன்மதனேவென மயங்குவார்கள்.

இதிலடைந்திருக்கும் ஓர் ரகசியம், அபூர்வ சக்தி உபயோகித்தவர்களுக்குத்தான் தெரியும்.

இதை காலை மாலை நோய் பலம்போல் 1 அல்லது 2 மண்டலம் உட்கொண்டால் வெகு சீக்கிரத்தில் தாதுவைக்கட்டி வீரியத்தையும் பலத்தையும் கொடுத்து இழந்துபோன ஆண்மைத்தனம் முழுமையும் திரும்பி வரும்படிசெய்கிறது. இக்குணம் இதிலமைந்திருப்பது மகா ஆச்சரியமாயிருக்கிறது. இப்படியும் ஒரு மருந்துண்டாவென்று பிரமிக்கச் செய்கிறது. தாதுவைக்கட்டி இல்வாழ்க்கையில் இன்பத்தைக்கொடுத்து பால்யம், யௌவனம், விருத்தாப்பியம் இந்தப் பருவங்களில் அடையவேண்டிய காலத்திற்கு முன் அடைந்த விபரீதங்களை நிவர்த்தி செய்யும். கிழத்தனத்தை நீக்கி வல்லமையடையச் செய்வதில் பெயர் பெற்றது. நீரழிவு, பிளவை, குன்மம், கர்சம், க்ஷயம், ஈளை, இருமல், கஷ்ட சுவாசம், கோழை, கபக்கட்டு, கிரந்தி முதலிய சகலவித கர்ம வியாதிகளும் தீரும். தளர்ந்துபோன நரம்புகளுக்கு முறுக்கேற்றும்,வீரியத்தை கெட்டிப்படுத்தி ஆண்மைக்குறைவை நீக்கி தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்கு மிஞ்சின ஔஷதமில்லை. 100 நாளைக்கு தங்க பஸ்பமும் நரசிங்க லேகியமும் ரூபாய் 100. 50 நாளைக்கு ரூபாய் 50. 25 நாளைக்கு ரூபாய் 25. சிங்கப்பூர் வாசிகள் சார்ஜு ரூபாய் 2-ம் சேர்த்து முன் பணம் அனுப்பவேண்டும்.

## தங்க பஸ்பம் மகா மன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா

இழந்துபோன ஆண்மையைத் திரும்பக் கொடுக்கும். இல்லற வாழ்க்கையில் இன்பத்தைக் கொடுத்து

தாது புஷ்டியை உண்டாக்குவதில் இதற்கு மிஞ்சின ஔஷதமில்லை.

மேகரோகம் கொடிய வியாதி இல்லாதவர்கள் தாதுபுஷ்டி, சரீர திடம் அடைய தங்க பஸ்பத்தையும் அனுபானம் மகாமன்மத காமகேசரி அல்வாவில் சாப்பிடவும். காமகேசரி அல்வாவும் தங்க பஸ்பமும், 100 நாள் மருந்து ரூபாய் 50. 50 நாளைக்கு ரூபாய் 25. 25 நாளைக்கு ரூபாய் 12—8—0

## புத்திர சந்தானம் உண்டாகிவிட்டது.

ஐயா எனது நண்பர்களில் ஒருவர் ஆண் தத்துவம் சிறிதுமின்றி மனவருத்தத்துடனிருந்தார். அநேக வைத்தியர்களால் கொடுக்கப்பட்ட பல மேல் பூச்சு மருந்துகள் உபயோகித்தும், அநேக மருந்துகள் சாப்பிட்டும்,கொஞ்சம்கூட குணமாகவில்லை. தங்கள் மேன்மை பொருந்தியதும், உயர்ந்த பலனைக் கொடுக்கக்கூடியதும், மதிப்பிட முடியாததுமான தங்க பஸ்பம் மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா 50 நாள் மருந்து கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை 100-ம் தருவித்து 15 நாள் சாப்பிட்டதில் பெருமை பாராட்டத்தக்க புதிய சக்தியையும் 10 மடங்கு ஆண்மைத் தன்மையையும் கொடுத்துவிட்டது. மேற்படி வியாதியஸ்தர் பூரா மருந்தையும் சாப்பிட்டதில் தனது இழந்துபோன ஆண்மைத்தனம் பூராவையும் பெற்றுவிட்டார். இப்பொழுது ஒரு ஆண் குழந்தையை அடைந்திருக்கிறார். தங்கள் ஞாபகச்சின்னமாகமேற்படி குழந்தைக்கு "வேலுசாமி" என்கிற தங்கள் நாமத்தையே சூட்டி அழைத்துவருகிறார்.

V. S. NATANAM, Sub-Inspector of Police, South Arcot Dt.

வைத்திய ஆசிரியர் **ஆர். எம். கே. வேலுசாமி, சித்த வைத்தியசாலை, பழனி.**

தந்தி விலாசம்— வேலுசாமி, பழனி.

பிராஞ்சு:— ☞ 146, புரசவாக்கம் ஹைரோடு, சென்னை.




# காதலும் கடுந்தியாகமும்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

கும்போது நீங்கள் அங்கு கொண்டுவரப்பட்டு மேடையின் மீதிலுள்ள மரத்துடன் சேர்த்துப் பிணைக்கப்பட்டீர்கள். அப்பொழுது நீங்கள் ஜனத்திரளை ஏறிட்டுப் பார்த்தீர்கள். உங்களுடைய அழகும் கெம்பீரமும் தோன்றும் வதனம் அவர்கள் மனதை இரக்கமடையச் செய்தது போலும். இல்லையேல் அவர்கள் கண்களிலிருந்து வடியும் நீரைத் துடைத்துக்கொண்டு கூட்டங் கூட்டமாக அவ்விடத்தை விட்டுச் செல்ல வேண்டியதில்லையல்லவா? சவுக்கின் ஒலி செவிகளைச் செவிடுபடச் செய்தது. உங்கள் தேகத்தில் பல இடங்களில் சதை பெயர்ந்து ரத்தம் வெளிப்பட்டு வழிந்தோடியது. அதைப் பார்க்கவும் என் கண்கள் மறுத்தன. நானடைந்த வேதனை கொஞ்சமல்ல. பின் நடந்த விஷயம் எனக்கொன்றும் தெரியாது. மூர்ச்சித்தேன். நான் விழித்தெழுந்து பார்க்கும்போது மணி 8 ஆகி இருந்தது. மைதானத்தில் ஒருவரையும் காணோம். விசாரித்ததில் நீங்கள் அடிபட்டு மயக்கமுறும் தருணம் முகமூடியணிந்த மனிதர்கள் பலர் தோன்றித் தங்களைக் கவர்ந்து சென்றதாக அறிந்தேன். சிறிது சந்தோஷம் கொண்டேனாயினும் நீங்கள் உயிர் பிழைத்தீர்களா? இல்லையா? என்ற விபரங்களை அறிய முடியாது தவித்தேன். இந்த நிலையில் என் தகப்பனார் என்னிடம் வந்து திருமண விஷயமாகப் பேசினார். (அவருக்கும்—ஜமீன்தாருக்கும் நிகழ்ந்த சம்பாஷணை முற்றும் கூறி) அவர் உங்கள் குடும்பத்திற்குப் புரிந்த பாதகச் செய்கையும் உங்களுக்குப் புரிந்த கொடூர தண்டனையும் நான் அவரை வெறுக்கும்படி செய்தது. எப்பொழுது நான் என் காதலரை அடைய முடியாது போயிற்றோ அப்பொழுதே நான் உயிர்விட வேண்டியவளே இது தான் என் முடிவான தீர்மானமாயிருந்தது. ஆகவே அவருடைய கல்யாண ஏற்பாட்டிற்கு உடன்பட மறுத்தேன். எனது துணிகரமான பதிலைக் கேட்டு என் தந்தை அதிக சீற்றங்கொண்டார். எவ்விதமும் குறிப்பிட்ட தினத்தில் திருமணம் நடந்து தானுகுமென்று கோபத்துடன் கூறிச் சென்றார். அவர் சென்ற பின் நீண்ட யோசனையிலாழ்ந்தேன். தற்கொலை செய்து கொள்ளலாமாவென்று கூட நினைத்தேன். ஆனால் மயக்கமாயிருக்கும்போது தூக்கிச்செல்லப்பட்ட உங்களின் முடிவு என்னவாயிற்று என்பதையறியாமல் பிராணத்யாகம் செய்து கொள்ள என் மனம் இடங்கொடுக்கவில்லை. இரவு நேரங்களில் உங்களிருப்பிடம் வந்து விஷயமறியலாமென்றாலும் பலமான காவல் புரியப்பட்டுவந்தேனாகையால் அதற்கும் சந்தர்ப்பம் கிட்டவில்லை. அதன் பின் முகூர்த்த நேரம் வரையில் பார்ப்பது அதுவரையில் உங்களிடமிருந்து தகவல் ஒன்றும் வரவில்லையானால் பின் பிராணத்யாகம் செய்துகொள்வது என்ற முடிவிற்கு வந்தேன். வழக்கம்போல் அரண்மனையிலுள்ள எல்லோரிடமும் சகஜமாகவே பழகிவந்தேன். என் தந்தையும் என் பிடிவாதத்தை ஒழித்துவிட்டதாகச் சந்தோஷப்பட்டாராம்............. இன்று மாலையில் அவர் என்னிடம் வந்து இவ்வூருக்குப் புதிதாக ஓர் ஸில்க் வியாபாரி வந்து கடை போட்டிருப்பதாகவும் உயர்ந்த ரகங்கள் எல்லாமிருக்கிறதாகவும் தான் இன்றுமாலை கடைக்கு வந்து பார்வையிடுவதாக வியாபாரிக்குக் கூறியனுப்பியிருக்கிறதாகவும் கூறி என்னையும் கூடவந்து கல்யாணத்திற்குவேண்டியவற்றை எடுக்கும்படி கூறினார்.எனக்கும் வீட்டிற்குள்ளேயே அடைபட்டுக் கிடப்பது கஷ்டமாகவே இருந்தது. ஆகவே நானும் வருவதாகக் கூறினேன். பின் எல்லோரும் அங்கு வந்தோம். முதலில் உங்களுடைய குரலை செவியுற்ற நான் சந்தேகங்கொண்டு உற்றுநோக்கினேன் உங்களுடைய வேஷத்தில் மற்றெல்லோரையும்ஏமாற்றினீர்கள்.ஆனால் என்னிடம் அகப்பட்டுக்கொண்டீர்கள் என்று கூறி மேலும் அவனை நோக்கி "இனி இங்கு தாமதிப்பது ஆபத்தாக முடியும் இன்று இரவிற்குள் இவ்வூரை விட்டு வெளிப்படவேண்டும். நீங்கள் அன்று கொண்டு செல்லப்பட்ட பின் இவ்வளவு நாள் என்ன செய்துகொண்டிருந்தீர்கள்? உங்களுடைய தோழர்கள் எல்லாம் எங்கே இருக்கிறார்கள்? நீங்கள் எவ்விதம் ஸில்க் வியாபாரியானீர்கள்? இந்த விபரமெல்லாம் அறிய என் மனம் துடிக்கிறது. காயங்களெல்லாம் சொஸ்தமாகிவிட்டனவா?" என்று மிகுந்த ஆவலுடன் கேட்டாள்.

"இன்ப வடிவே! காயங்களெல்லாம் சொஸ்தமாகிவிட்டன, என்மேல் விழுந்த ஒவ்வொரு அடியும் உன் காதற் பரிசெனவே மதித்தேன். என் மனதில் காதல் மரம் தழைத்தோங்காதிருந்தால் .... .. ....இந்த சமஸ்தானத்தின் அதிகாரவர்க்கத்தினரெல்லாம் என் துப்பாக்கிக்கு இரையாகி வெகுகாலமாகி இருக்கும். உன் காதலுக்கு அடிமையாகி என் வீரத்தையும் பலத்தையுமிழந்தேன். உன் காதலொன்றே என்னைப் புனிதனாக்கியது. அதுவே என் கொடூர சிந்தையை மாற்றியது. என் நெஞ்சத்தில் வேரூன்றி இருந்த பழிவாங்கும் எண்ணத்தை அகற்றியது. எந்த நோக்கத்தோடு ஒரு கூட்டத்தைச் சேர்த்தேனோ அந்தப் பழிவாங்கும் நோக்கம் அகன்று விடவே என் கூட்டத்தாரையும் வேறு வழியில் திருப்பிவிட்டேன்.

நான் எங்களது இருப்பிடத்திற்கு எடுத்துச் செல்லப்பட்ட 10-ம் நாள் எழுந்து நடமாடும் நிலைமைக்கு வந்தேன். முதலில் உன்னைப்பற்றி விசாரித்தேன். இன்னும் 10 தினங்களில் உனக்குத் திருமணம் நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்பதை யறிந்திடுக்குறவோ, உன்மீது வெறுப்படையவோ இல்லை. ஏன்? உன் மனதை நான் அறிவேன். உன்னை அவர்களிடமிருந்து மீட்டுவதே எனது முதல் வேலை எனக்கொண்டேன். அத்துடன் என் நண்பர்களையும் இனிமேலும் இத்தீய வழியில் பிரவேசிக்கவிடாது காப்பாற்றவேண்டியது அவர்களின் தலைவனாகிய எனதுகடமையல்லவா? ஆகவே இதுவரையில் பல பணக்காரர்களிடமிருந்து கொள்ளையடித்துச் சேமித்து வைத்திருந்த ஏராளமான தனத்தைக் கொண்டு ஓர் ஸில்க் ஸ்டோர் கம்பெனியை இத்தலையில் ஏற்படுத்தி வியாபாரி என்ற முறையில் உன் தந்தையின் சிநேகிதத்தைப் பெற்று உன்னை விடுவிப்பதென்றும் என் தோழர்களையும் வியாபார முறையில் பழக்கி மென்மேலும் வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்தும்படி செய்வதெனவும் முடிவு செய்தேன். இந்த முடிவை என் சகாக்களிடம் கூற என்னிடம் உறுதியான நம்பிக்கை கொண்ட அவர்களும் அதைச் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டனர். மறுநாளே என் ஆட்களில் சிலரை சென்னை, பம்பாய், கல்கட்டா, பெங்களூர் முதலிய நகரங்களுக்குச் சென்று, விலையுயர்ந்த பட்டுகளைக் கொள்முதல் செய்து வரும்படி அனுப்ப அவர்களும் சென்று சில தினங்களில் ஏராளமான மூட்டைகளுடன் திரும்பினர். இதற்குள் என் உடல் நிலை முற்றும் குணமாகிவிட்டது. பின் நாங்கள் வடநாட்டார் போல் வேடமணிந்து உன் தந்தையிடம் வந்து அனுமதி பெற்று இந்த "ஸில்க் பஸாரை" ஏற்படுத்தினோம். இன்று உன்னைச் சந்திக்கும் பாக்கியத்தைப் பெற்றேன். அவ்வளவுதான்" என்று கூறி முடிக்குந் தருணம் "ஜெயா! ஜெயா!" வென்று ஜெயாவை அழைக்கும் ஜெமீந்தாரின் குரலொலியைச் செவியுற்ற இருவரும் செய்வதையறியாது திகைத்து நின்றனர்.

(தொடரும்)


## ஓ ரி ய ண் ட ல்

கவர்ன்மெண்ட் ஸெக்யூரிடி லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.

1874-ம்-வருஷம் ஸ்தாபிக்கப்பட்டது. தலைமை ஆபீஸ், பம்பாய்.

1935-ம்-வருஷ ரிப்போர்ட்டின் முக்யாம்சங்கள்.

| | | |
|---|---|---|
| எடுத்துக்கொள்ளப்பட்ட புதியபாலிஸிகள் | ரூ. | 8,89,89,149 |
| வ்ருஷ வருமானம் | ,, | 3,49,16,412 |
| அமுலிலிருக்கும் பாலிஸிகள் | ,, | 59,25,32,038 |
| பாலிஸிதாரர்களுக்கும் வார்ஸுகளுக்கும் செலுத்தப்பட்ட தொகை | ,, | 17,43,21,855 |
| விருத்தியான மொத்த தொகை | ,, | 17,01,62,491 |

இந்தியாவின் பிரதான இன்ஷ்யூரன்ஸ் ஆபீஸாகிய

## ஓ ரி ய ண் ட லி ன்

உன்னத ஸ்தானத்தையும் பொதுஜன அபிமானத்தையும்

இவ்வெண்கள் நன்கு விளக்குகின்றன.

விசேஷ அபிவிருத்தியும் பொதுஜன ஆதரவும் பெற்றிருக்கும் இந்த

## இந்திய லைப் ஆபீஸில்

உங்கள் ஆயுளை இன்ஷ்யூர் செய்ய

தாமதிக்காதீர்கள்.

விவரங்களுக்கு:— ஸப்-பிராஞ்சு காரியதரிசி,

ஓரியண்டல் லைப் ஆபீஸ், 251, மேல மாசி வீதி, மதுரை.

அல்லது பிராஞ்சு காரியதரிசி,

ஓரியண்டல் லைப் ஆபீஸ், திருச்சினாப்பள்ளி.

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் மற்ற ஆபீஸ்களுக்கு எழுதவும்.

| | | | |
|---|---|---|---|
| ஆக்ரா | கோயமுத்தூர் | கோலாலம்பூர் | பாட்னா |
| ஆஜ்மீர் | கொலம்போ | லாகூர் | பெஷாவர் |
| ஆமதாபாத் | டக்கா | லக்னோ | பூனா, ராய்பூர் |
| அலகாபாத் | டெல்லி | மதராஸ் | ராஜஷாஹி |
| அம்பாலா | கௌஹாத்தி | மாண்டலே | ரான்சி |
| அமிர்தஸரஸ் | குண்டூர் | மதுரை | ரங்கூன் |
| பெங்களூர் | ஜால்கான் | மர்க்காரா | ராவல்பிண்டி |
| பெரெல்லி | ஜல்பைகுரி | மொம்பாஸா | சிங்கப்பூர் |
| பெல்லாரி | ஜோத்பூர் | முல்டான் | சுக்கூர் |
| கல்கத்தா | ஜப்பல்பூர் | மைசூர் | திருவனந்தபுரம் |
| கள்ளிக்கோட்டை | கைராச்சி | நாகபுரி | விசாகப்பட்டணம் |

M. R. ஸ்ரீ ஷண்முகவிலாஸ் ஜோதிடசாலை

பாலக்கரை, திருச்சினாப்பள்ளி.

பிராஞ் 3, கோவிந்தப்ப நாயகன் தெரு, மதறாஸ்.

பழய ஏட்டோலைப் பிரதிகளைக் கொண்டு கந்தர்நாடி வாக்கியம் ஈஸ்வர வாக்கியம் காக்கேயர் வாக்கியம் ரேகை சாஸ்த்திரம் நாரதர் வாக்கியம்,

இன்னும் அனேக வாக்கியத்தைக் கவனித்து உங்களுடைய நடந்தகாலம் தற்காலம் இனிமேல் நடக்கப் போகும் விஷயங்களை தெளிவாகவும் விவாகம் உத்தியோகம் வியாபாரம் ஆயுள்பாகம் இன்னும் மற்ற விஷயங்களை வருஷ மாத வார ரீதியாக ஆயுள்வரை சொல்லக்கூடும்

முக்கிய விஷயம்

தாய் தந்தை ஜாதகர் மனைவி நாமங்களும் முற்பிறப்பு பின் ஜென்மம் கூறப்படுவது மிகவும் ஆச்சரியமாகும் விபரத்திற்கு மேற்கண்ட விலாசத்திற் கு யெழுதுக.

M. R. ஆறுமுகம் பிள்ளை, மானேஜர்.

உறுதியாகவும் விலை சல்லிசாகவும்

அசல் கோளும்பு குடைகள்

கிடைக்கு மிடம்.

ஸ்ரீ தெண்டாயுதபாணி மெடிகல் ஹால்,

காரைக்குடி & கண்டனூர்.

இல்லற வாழ்க்கையில் இன்பமதில்லாவிட்டால்



காமலீலை மாத்திரை

இதோ இன்பம்!

இதில் ஒன்றை வாயிலிட்டு பாலருந்தி நம்முடைய லேபன மெழுகையும் மேற்பூச்சாய் பூசினால் இல்லற இன்பம் பலவகைப் பிரியமாய் முடியும். தேகக்கட்டு, வலிமை வீரியம், உற்சாகம், சக்திஎல்லாம் கூடும்.

அநேக அற்புத மூலிகைகளினால் ஆக்கப்பட்டது.

24 மாத்திரை கொண்ட புட்டி ரூ. 2—0—0

மேல் பூசும் லேபனம் புட்டி ரூ. 1—0—0

குணமில்லையேல் பணம் வாபீஸ்] காமலீலை மாத்திரை டிப்போ. சேலம். (S. I.)

ஜோதிட மகுடவர்த்தனர்.



இந்த மன்னர் சமஸ்தான 25வது தலைமுறை ஜோதிஷர். பீமகவி, சுகர் புஜண்டர்,சாஸ்திர நிபுணர். ஜோதிஷத்தில் "உலக சிரேஷ்டர்" ஜூ மெடல்கள் பெற்றவர். ஜாதகம் ஸ்புடஞ் செய்து பொதுப் பலன் ரூ. 1, ஒருதசைக்கு புத்திபலன் ரூ. 2. அஷ்டவர்க்கம் ஆயுள்வரை புக்திபலன் ரூ. 7. (ஜாதகம் முன் ரூ. 4. தேவை) 1 வருடம் மாதா மாதப் பலன் ரூ. 1-8-0 கேள்வி 1க்கு ரூ. 1. ஜாதகம் அல்லது எழுதும் நேரம் தேவை.

புரொபஸர். N. சுப்பிரமணியம்.

கிர். 6, ஜோதிஷ ஆஸ்ரமம், வலாஜாபாத் S. I R. (சென்னை.)

## கொப்பனுபட்டி

### கலைமகள் கல்லூரி
### நகரத்தாரவர்களுக்கு ஓர் விக்ஞாபனம்

திருவாளர், அ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்களால் நடத்தப்பெற்று வரும் இக் கல்லூரி மிக உயர்ந்த முறையில் மாணுக்கிகளுக்கு சுதந்தர உணர்ச்சியையும் ஆராய்ச்சி அறிவையும் நல்கத் தக்க வழியில் நடைபெற்று வருவது யாவரும் அறிந்ததொன்ருகும். ஆண் மக்களுக்கென கம்பையில் நடைபெறும் குருகுலம் போன்று பெண் மக்கட்கும் ஒரு குருகுலம் காண வேண்டுவது மிக அவசியம் என்பது எல்லோரும் ஒப்புக்கொள்ளத்தக்கதாகும். அது போல் தற்காலம் முன்னேற்றம் அடைந்து வரும் இக் கல்லூரியில் இப்பொழுது 76 மாணுக்கிகள் கல்வி பயின்று வருகின்றனர். இங்கு வதியும் மாணுக்கிகள் நல்ல பழக்க வழக்கத்திலும், உடல் நலத்திலும், அறிவிலும் மேம்பாடுற்று வருவது குறிப்பிடத்தக்கது. இன்னும் அதிகமான மாணுக்கிகட்கு கல்வி பயில இடமளிக்கும் பொருட்டு சுமார் 2 ஏக்கர் விஸ்தீரணமுள்ள ஓர் இடத்தில் புதிய கட்டிடம் ஒன்று கட்டுவதற்கு வேலைகள் ஆரம்பிக்கப்பெற்றுள்ளன. கட்டிடத்துக்கு ரூ. 50,000 (ஐம்பதினுயிரம்) மதிப்பு போட்டிருக்கிறுர்கள். அதற்கு வேண்டிய வேலைகளும் நடந்து வருகிறது. தர்மங்களில் உயர்ந்தது வித்யா தர்மம் என்பது அறிஞர் கொள்கை. தர்மத்தில் தலை சிறந்த நமது சமூகத்தவரின் உதவி காலத்திற்கேற்ற இத் தருமத்திற்குப் பெரிதும் எதிர் பார்க்கப்படுகிறது. தாராளமாகப் பொருளுதவி செய்து இப்பணியை நிலைநாட்ட நம்மவர்கள் பின்னடைய மாட்டார்களென்பது எமது பூரண நம்பிக்கை. ஆகையால் நகரத்தார் அவர்கள் அனைவரும் இக் கல்லூரிக்கு வேண்டிய பொருளுதவி செய்து நன்ருக நடைபெறச் செய்ய வேண்டுமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன். நம் தனவணிகநாட்டில் நடைபெற்று வரும் இக் கல்லூரியானது மேன்மேலும் ஓங்கி வளர்ந்து நம் மாணுக்கிகள் யாவருக்கும் எல்லா நலனும் அளிக்க இறைவனைப் பிரார்த்திக்கிறேன் என்று சா. நா. அண. அண்ணுமலை செட்டியார் அறிவிக்கிறுர்.

——

### கண்டனூர்
(ஒரு நிருபர்)

7-12-36உ மாலை 4-30 மணிக்கு இவ்வூர் ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தின் 9-வது மாதாந்திரக் கூட்டம் திரு. கதி. பழநியப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் ஆரம்பிக்கப்பெற்றது.

தலைவர்முன்னுரைக்குப்பின் தூத்துக்குடி தேசபக்தர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களின் மரணத்தைக் குறித்து ஓர் அநுதாபத் தீர்மானமும் திருவிதாங்கூர் மகாராஜா அவர்கள் தம் ஸ்டேட்டிலுள்ள ஆலயங்களில் ஹரிஜனங்களை பிரவேசிக்கும்படி அநுமதித்ததைக் குறித்து ஓர் சந்தோஷத் தீர்மானமும் காரைக்குடி சு. ராம. ராமனுதன் செட்டியாரவர்கள் 14-11-36 ல் கோவிலூரில் நடந்த 96 ஊர் கூட்டத்தின்படி தம்முடைய ராவ்பகதூர் பட்டத்தை துறந்து காங்கிரசின் சார்பாக தஞ்சை

## :: கடிதங்கள் ::

நகரசபைக்குத் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டிருப்பதைக் குறித்து ஓர் பாராட்டுத் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டன.

——

### அமராவதிப் புதூர்
### வாலிபர்சங்கம் திறப்புவிழா
(ஒரு நிருபர்)

இந்த வாலிபர் சங்கம் தாதுவு கார்த்திகைமீ 26உ வெள்ளிக்கிழமை காலை 9 மணிக்கு திருவாளர் தி. நாராயணன் அவர்கள் தலைமையில் இளைஞர்களின் ஊக்கத்தால் திறக்கப்பட்டது. இதன் நோக்கம் தேச முன்னேற்றமும், இளைஞர்களின் அறிவு முன்னேற்றமும். தலைவர் தனது முகவுரையில் சங்கமும் அதன் தேவையைப் பற்றியும் உலகத்தில் இப்பொழுது முன்னணியில் நிற்பது, சங்கத்தில் வளர்ந்த அரசாங்கங்கள் தானென்றும் சொன்னுர். பிறகு திருவாளர் சுப. நாச்சியப்பன் அவர்கள் சங்கம் பெரியவர்கள் பள்ளிக்கூடம் என்றும் நமது அடிமை நாடு முன்னேற வேண்டுமென்ருல் இம்மாதிரியான சங்கங்கள் ஏற்படுத்துவதனுல் தான் ஆகுமென்றும் கூறினுர். பிறகு எ. சுப்பிரமணியன் அவர்கள் அறிவு வளர்ச்சிக்கு இச்சங்கம் உதவியாயிருக்குமென்றும் எல்லோரும் சேர்ந்து ஆதரிக்க வேண்டுமென்றும் வற்புறுத்தினுர். தலைவர் பிறகு சங்கத்தின் சட்டங்களை படித்துக் காட்டினுர். எல்லோரும் ஒப்புக்கொண்டார்கள். இச்சங்கத்திற்கு பல பத்திரிகைகளும் புத்தகங்களும் தருவதாக சில அங்கத்தினர்கள் கூறினுர்கள். காரிதரிசி மு. ராமசாமி அவர்கள் வர்த்தனவாழ்த்துக் கூற கற்கண்டு தாம்பூலம் கொடுத்து மங்கள வாழ்த்துடன் கூட்டம் முடிந்தது.

——

### பட்டு பஹாட் செட்டியார்கள் சங்கம்

தாது வருடம் ஐப்பசி மாதம் 20உ நடந்த நிர்வாகசபைக் கூட்டம் சனவைசிய விவாக சம்பந்தமாக பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கம் செய்த தீர்மானங்களை இச்சங்கமும் ஆதரிக்கிறது என்ற தீர்மானம் நிறைவேறியது.

தாது வருஷம் கார்த்திகை மாதம் 7உ ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 5 மணிக்கு கூடிய நிர்வாகசபையில் நமது குமார ராஜா கனம் மு. அ. முத்தையா செட்டியாரவர்கள் சென்னை மாகாண கல்வி மந்திரியாக நியமிக்கப்பட்டிருப்பதைக் கேட்டு இச்சங்கம் தன்னுடைய மகிழ்ச்சியை குமார ராஜா அவர்களுக்கு தெரிவிப்பதுடன் முதன் முதலாக நமது சமூகத்தாருக்கு இப்பெருமையை அளித்ததற்கு காருண்ய கவண்மெண்டாருக்கு நன்றியை தெரிவித்துக் கொள்ளுகிறது என்ற தீர்மானங்கள் ஏகமனதாக தீர்மானிக்கப் பெற்றது.

உலகத்தில் சிறந்த
சரும நிவாரணி




ஜாம்பெக்வெகுவிரைவில் கரப்பான் புண், சிருய்ப் புண், ரணங்கள் முதலியவைகளை குணப்படுத்துகிறது.

உலகத்தில் காயங்கள், சரும வியாதிகள் இவைகளுக்கு சிறந்த நிவாரணி ஜாம்பெக். வெட்டுக் காயங்கள், தீப் புண்கள், ரணம், கரப்பான் புண், சிராய்ப் புண், ஆராத ரணங்கள், கட்டிகள், கணுக்கால் வலி, விஷப் பூச்சிக் கடிகள், மூலங்கள் முதலியவைகளுக்கு ஜாம்பெக் மூலிகை களிம்பை தடவுங்கள். அது வீக்கத்தை குறைத்து வலியை நிறுத்தி ஆச்சர்யப்படும்படி உடனே குணப்படுத்துகிறது. எல்லா மருந்து வியாபாரிகளும் விற்கிறுர்கள்.

விலை ரூ 1 & ரூ 2—4—0.

ஏஜண்டுகள்:— மெஸர்ஸ் தாதா & கோ., P. T. சென்னை.

மிருகக் கொழுப்புக் கலவாதது.

ஜாம்பெக்
Zam-Buk

## சிறுகூடல்பட்டி

### கிராம காங்கிரஸ் சபை
(ஒரு நிருபர்)

5-12-36உ மாலை 5 மணிக்கு சு. வீர. கரு. கருப்பஞ் செட்டியாரவர்கள் பங்களாவில் இச்சபையின் விசேஷக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. செ. பழ. அழ. குப்பானவர்கள் தலைமை வகித்தார்கள்.

அரும்பெரும் தியாகியான தூத்துக்குடி தேசபக்தர் வ. உ. சிதம்பரம்பிள்ளையின் மரணத்திற்கு வருந்துவதாகவும் திருவாங்கூர் மகாராஜா அவர்கள் தமது சமஸ்தானத்தில் சர்க்காருக்குச் சொந்தமான எல்லாக் கோவில்களிலும் ஹரிஜனங்கள் பிரவேசிக்க உரிமை யளித்ததற்காக மகாராஜா அவர்களுக்கு இச்சபை நன்றி செலுத்துவதாகவும் தமது பட்டத்தைத் துறந்த காரைக்குடி சு. அ. சு. ராம. ராமனுதன் செட்டியாரவர்களை இச்சபை பாராட்டுவதாகவும் தீர்மானங்கள் நிறைவேறின.

——

### பட்டந் துறந்தோருக்குப் பாராட்டு
### தேவகோட்டை
(ஒரு நிருபர்)

6—12—36 மாலை 5 மணிக்கு இந்திய இளைஞர் சங்கத்தில் M. நாகலிங்கம் அவர்கள் தலைமையின்கீழ் வாரக்கூட்டம் நடைபெற்றது. அப்பொழுது திருவாளர்களான S. M. C. T. நாகன், K. R. S. முத்து, K. R. சொக்கலிங்கம் சேர்வை, S. சிவப்பிரகாசம், திருநாவுக்கரசு ஆச்சாரியவர்களும் சிக்கந்தர்கான் சாயபு அவர்கள் ஆகியோர் சொற்பொழிவாற்றினுர்கள். அப்பொழுது மேன்மைதங்கிய திருவாங்கூர் மகாராஜா அவர்களைப் பாராட்டுவதாகவும் சமீபத்தில் T. A. ராமலிங்கஞ் செட்டியார், K. சீதாராம ரெட்டியார், S. R. M. ராமனுதன் செட்டியார் அவர்கள் தங்களது பட்டத்தை துறந்து தேசசேவைக்கு முன் வந்ததுபற்றி சந்தோஷிப்பதாயும், தலைவர் சிதம்பரம் பிள்ளையவர்கள் மரணத்திற்கு வருந்தி குடும்பத்திற்கு தங்கள் அனுதாபத்தை தெரிவித்துக்கொள்வதாயும் தீர்மானங்கள் நிறைவேறின. ——

### செட்டியார்கள் சங்கம் பேரா

1936-ம் வருடம் நவம்பர் மாதம் 30-ந் தேதி மாலை 4-30 மணிக்கு ஆருவது ஆண்டு மூன்ருவது நிர்வாக சபைக் கூட்டம் கூடியது.

தைப்பிங் சி. சொ. கடை ராஜீநாமச் செய்திருப்பது பற்றி வந்துள்ள கடிதத்தை தைப்பிங் நகரத்தாரவர்களுக்குத் தெரிவித்து ஓர்முடிவு செய்தனுப்பவேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறதென தீர்மானிக்கப்பெற்றது. 5-12-36-ல் கோலாலம்பூர் தலைமைச் சங்கத்தில் நடைபெறவிருக்கும் விசேஷ மகாசபைக் கூட்டத்திற்கு பேரா மாகாணத்திலுள்ள ஒவ்வொரு ஊர் நகரத்தாரவர்களுக்கும் எல்லா அங்கத்தினர்களையும் மேற்படி பொதுக்கூட்டத்திற்கு போய்வர வேண்டுமாயும், சந்தர்ப்பமில்லாவிடில் பிரதிநிதியாவது தேர்ந்தெடுத்து அனுப்ப வேண்டுமாயும் லெட்டர் எழுதுவதெனத் தீர்மானிக்கப்பெற்றது.

புதியதாதைக் காட்டும் — சி. எம். சாமி — போன பலத்தை மீட்டும்

மன்மத குளிகை

இதைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

இது ஆயிரக்கணக்கான மக்களுக்குப் புத்துயிரளித்துப் புகழ் பெற்றது.

தாது விருத்தியை நாடுபவர்களுக்கு இதைவிடச் சிறந்த மருந்து வேறு இல்லையென்றே சொல்லலாம். இதன் அபார சக்தியைப்பற்றி எழுதுவதென்ருல் இடம் போதாது. இது தாதுக் குறைவு, பலவீனம், களைப்பு, ஆயாசம், ஆண்மையின்மை, கோசந்துவளல் முதலியவைகளை நீக்கி, வீரிய விருத்தி, தாதுபலம், போக வலிமை, திடகாத்திரம், உற்சாகம் முதலியவைகளைக் கொடுக்கும். இல்லற சுகத்தை எளிதில் அடைய விரும்பும் ஒவ்வொருவருக்கும் இது இன்றியமையாதது. இன்றே ஆர்டர் செய்யுங்கள். 20 குளிகை விலை ரூ. 2—0—0. (தபால் சார்ஜ் வேறு)

பிராஞ்சு:—1/54 அருணுசல நாயக்கன் தெரு, சிந்தாதிரிப் பேட்டை, மதராஸ்.

தலைமை ஆபீஸ்:— மலையப்பசாமி வைத்தியசாலை, பழனி. S. I.



## சிவகங்கை ஜமீன் விவசாயிகள் சங்கம்.

### நிறைவேறிய தீர்மானங்களிற் சில

சிவகங்கை, டிச 10—

சிவகங்கை ஜமீன் விவசாயிகள் சங்கத்தின் பொதுக் கமிட்டியின் சாதாரண கூட்டம் இன்று மாலை 3 மணிக்கு, சிவகங்கையிலுள்ள பாகநேரி நாட்டார் விடுதியில் தலைவர் ஸ்ரீமான் S. O. SP. உடையப்பா அவர்கள் தலைமையில் கூடி அடியில்கண்ட தீர்மானங்களை நிறைவேற்றின.

1. தேசபக்தர் V. O. சிதம்பரம் பிள்ளை அவர்கள் மரணமடைந்தது பற்றி இந்தச் சங்கம் மிகவும் வருந்துவதுடன், அன்னுரின் குடும்பத்தார்களுக்கு சங்கத்தின் ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்துக்கொள்கிறது.

2. நமது சங்கத்தின் தலைவர் ஸ்ரீமான் S. O. SP. உடையப்பா அவர்களும், உப தலைவர் ஸ்ரீமான் S. V. S. ராமசாமித் தேவர் அவர்களும், அங்கத்தினர் ஸ்ரீமான் கார்மேகத் தேவர் அவர்களும், இராமனுதபுரம் ஜில்லா போர்டு அங்கத்தினர் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்களாக நின்று வெற்றி பெற்றதற்காக அவர்களையும், அவர்களின் வெற்றிக்குக் காரணஸ்தர்களான வாக்காளர்களையும் இச் சங்கம் பாராட்டுகிறது.

3. பெய்ஸ்பூரில் நடைபெறும் அகில இந்திய கிசான் மகாநாட்டிற்கு தலைவர் S. O. SP. உடையப்பா, உபதலைவர் S. V. S. ராமசாமித் தேவர், பொதுக்காரியதரிசி R. V. சுவாமிநாதன், N. K. R. A. T. வைரப்பா, P. L. K. பழனியப்பா மற்றும் இருவருள்பட 7 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இருவரையும் தலைவர் அல்லது பொதுக் காரியதரிசி நியமித்துக் கொள்ள அதிகாரம் கொடுக்கப்பட்டது.

4. வரப்போகும் சென்னைமாகாண சட்டசபை, மேல் சபை தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்களையே ஆதரிப்பதென்றும், அவ்வண்ணம் காங்கிரஸ அபேட்சகர்களுக்கே தங்கள் வாக்குகளை கொடுக்க வேண்டுமென்று எல்லா விவசாயிகளையும் இச்சங்கம் கேட்டுக் கொள்கிறது.

5. ராமநாதபுரம் ஜில்லாபோர்டு தேர்தலில் கல்லல் சர்க்கிளுக்கு காங்கிரஸ் அபேக்ஷகராக நின்ற நமது சங்கத்தின் பொதுக் காரியதரிசி ஸ்ரீமான். R. V. சுவாமிநாதன் அவர்களுக்கு விரோதமாக வேலை செய்த நமது சங்கத்தின் உதவிக் காரியதரிசி செம்பொன்னூர் ஸ்ரீமான். அ. சு. பெரி. சுப்பையா அம்பலம் அவர்களை இச் சங்கம் கண்டிக்கிறது.

6. இராமனுதபுரம் ஜில்லா போர்டை இரண்டாகப்பிரித்து ராமநாதபுரம் வடக்கு, ராமநாதபுரம் தெற்கு என்று பெயர் கொடுத்திருப்பதில், ராமநாதபுரம் வடக்கு ஜில்லாபோர்டு, திருப்பத்தூரில் வைப்பதென்பதை இச்சங்கம் ஆட்சேபிப்பதுடன் ஷை போர்டை சிவகெங்கையில் வைக்கவேண்டுமென்றும், போர்டுக்கு சிவகங்கை ஜில்லா என்று பெயர் கொடுக்க வேண்டுமென்றும் கவர்ன்மெண்டை இச்சங்கம் கேட்டுக்கொள்கிறது.

——

### காதலர் தற்கொலை ஒப்பந்தம்
### விவாகத்திற்குப் பெற்ருேர் ஆட்சேபமே காரணம்

ரங்கூன் டிச, 7

வின்கியி என்ற 26 வயதுள்ள மாணவனும் டைப்பிஸ்டு வேலைபார்க்கும் 28 வயதுள்ள மிஸ். கிரேசி என்ற சீன-பர்மியப் பெண்ணும் சிலகாலமாகச் சேர்ந்து வசித்துவந்தனராம். மிஸ். கிரேசியை விவாகம் செய்துகொள்ள விரும்பினுன். ஆனுல் அவளது பெற்ருேர்கள் அவனை மணப்பதை ஆட்சேபித்தனராம். சனிக்கிழமை இரவு காதலரிருவரும் பெண்வீட்டில் ஒரு அறையில் படுத்துக்கொள்ளச் சென்றனர். அதிகாலையில் அந்த அறையிலிருந்து புலம்பல் சத்தம் வந்ததைக் கேட்டு ஜனங்கள் போய் பார்த்தார்கள். காதலரிருவரும் விஷமருந்தி அதனுல் அவதிப்படுவதைக் கண்டு ஆஸ்பத்திரிக்கு கொண்டு சென்றனர். 4 மணிநேரத்திற்குப் பின் இருவரும் இறந்தார்கள். அவ்விருவரும் எழுதிவைத்திருந்த கடிதத்தில் விவாகத்திற்கு தடை ஏற்பட்டதில் இறந்து போவதாகக் குறிப்பிட்டிருந்தனர்.

## தேவகோட்டை தேர்தல் ஆட்சேபனை

### காங்கிரஸ் வாதியின் மனு

மதுரை டிச, 10

சமீபத்தில் நடைபெற்ற ராமநாதபுரம் ஜில்லாபோர்டு தேர்தலில் தேவகோட்டை வட்டத்திற்கு அபேட்சகராக நின்று தோற்றுப்போன காங்கிரஸ் வாதியான திரு. அருணுசலம் செட்டியார் வெற்றிபெற்ற திரு. லக்ஷ்மணம் செட்டியாருடைய தேர்தலை ஆக்ஷேபித்து, நேற்று மதுரை பிரின்ஸிபல் சப்ஜட்ஜ் திரு. டி. ஏ. சுப்பையா பிள்ளை (எலக்ஷன் கமிஷனர்) முன்பாக மனு வொன்றைத் தாக்கல் செய்தார். மனுதாரின் ஆக்ஷேபனையில், தேர்தல் சம்பந்தமாக ஓட்டுப் பெட்டிகளுடன் வரவேண்டிய நமூனுக்கள் சரிவரப் பூர்த்தி செய்யப்படவில்லையென்றும் தேர்தல் ஸ்தானம் மாற்றப்பட்டதன்றி ஓட்டுப் போடுமிடங்களும் குறைக்கப்பட்டதென்றும், போலிங் ஆபீசர்களுடைய செய்கையினுல் ஓட்டர்கள் சரிவர வாக்குப் பதிவு செய்ய இடமேற்படவில்லையென்றும், இத்தேர்தல் விஷயத்தில் பிரதிவாதியின் செய்கை திருப்திகரமாக இல்லையென்றும், இ. பி. கோ 171 (டி) பிரிவுப்படி நடவடிக்கை எடுக்கப்பட வேண்டுமென்றும் கண்டிருந்தது. அட்வகேட் திரு. கே. ஆர். வெங்கடாமய்யர் எம். எல். சி. மனுதாருக்காக ஆஜராகி மனுவை சமர்ப்பித்தார்.

## கடன் பாதுகாப்பு மசோதா

சமஸ்தான சட்டசபையின் நடைபெறப் போகும் கூட்டத்தில் பொது விஷயங்களைக் குறித்து 75 தீர்மானங்கள் வரை விவாதிக்கப்பெறும். புதுக்கோட்டை கடன்காரர்கள் பாதுகாப்பு மசோதா அக் கூட்டத்தில் எடுத்துக் கொள்ளப்படும். அம் மசோதா கொணர்வதற்குறிய காரணங்களும் நோக்கங்களுமாவன:—

கடன் வாங்கின சொத்து பேரில் அனியாயமாக வட்டி போடப்பட்டு, கடன் வாங்கியவர்கள் மிகுந்த கஷ்டத்துக்குள்ளாவது. கடன் கொடுத்தோர் சரியான கணக்குகளையும், குறிப்புகளையும் வைத்துக்கொள்வது சம்பந்தமாக சென்னை 1936-ம் வருஷத்து IV, 1935-ம் வருஷத்து VII சட்டங்களில் கண்டிருக்கிறபடி இச் சமஸ்தானத்தில் ஓர் விதி ஏற்படுத்துவது.

தாஸ் கர்ப்ப உற்பத்தி

சந்தான எண்ணெ.

புத்திர உற்பத்தி இல்லையென்று கவலை வேண்டாம். உடனே சந்தானம் உண்டாகும். இந்த எண்ணெயின் அற்புத குணங்கள்:—கற்பப் பையில் பூச்சி, அழுக்கு, கெட்ட சீக்கு, வெள்ளை வெட்டை, சூடு, ரத்தவெட்டை, நீர்கடுப்பு, சோகை, வெட்டை வாயு, வயத்தில் சூதகக்கட்டி, மெதந்து மெதந்து வலி, சூட்டினுல் தேகம் மெலிவு, பெரும்பாடு, பேஷ்டகாலத்தில் உண்டாகிற வயிற்றுவலி, இவற்றை மாற்றி புத்திர சந்தானத்தை உண்டு பண்ணும். கெற்பமாய் உள்ளவர்கள் மாதா மாதம் இதைச் சாப்பிட்டால் சுகப்பிரசவம் ஆகும். குழந்தைக்கு சீக்கு வரவொட்டாது தடுக்கும். இத்துடன் தாஸ் மனேகர நன்னரி சாலாமிசரி அல்வா சாப்பிடவேண்டும்.

22 வேளை எண்ணெ அடங்கிய பாட்டில் 1-க்கு ரூ. 15.

பாக்கிங் அண்டு தபால் கூலி வேறு.

என். வி. எம். பங்காரு தாஸ்,
தாஸ் சித்த வைத்திய ஔஷதாலயம்,
ராமச்சந்திரபுரம், புதுக்கோட்டை ஸ்டேட்.

பாதுகாப்பளிப்பது மிருதுவான ஆடைகளுக்கு




501 ஸ்பெஷல் பட்டுகளுக்கும் மஸ்லின்களுக்கும் கேடுதலை செய்யும் சுண்ணாம்புக்காரமும் மிருகக்கொழுப்பும் கலவாதது.

டாடாசோப் வேலைக் டிபார்ட்மெண்டு, 19A, வாணியர் தெரு, மதராஸ்.

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட், டாடாபுரம் & பம்பாய்.

## தென் இந்தியரைத் தடுத்தால்

### தேயிலைத்தொழில் நசித்துவிடும்

"தென் இந்தியத் தொழிலாளர் வருகை இலங்கையில் தடுக்கப்படுமானுல் அது தேயிலைத் தொழிலுக்குப் பாதகம் விளைவிப்பதாகும். தேயிலைத் தொழிலாளரில் கால்பாகத்தவர் இலங்கையரல்லர். அவர்களை நீக்கி இலங்கைத் தொழிலாளரை நியமித்தால் தேயிலை வியாபாரம் மந்தமாய் விடும்"

—ஜீ. எல். எச்டட்னி
(லிப்டன்ஸ் லி.)
மானேஜர்.

——

### செல்லுபடி ஆகாதவை 17
### கல்கத்தா மெயிலில் தீவிபத்து
### 700 தபால் பைகள் நாசம்

ஜபல்பூர், டிச. 12—

நேற்று பம்பாயிலிருந்து கல்கத்தாவுக்குப் புறப்பட்ட இம்பீரியல் மெயிலில் என்ஜினுக்கு அடுத்தாற்போலிருந்த தபால் வண்டியில் தீப்பற்றிக்கொண்டது. சூப்பிரண்டு அறிவித்ததிலிருந்து 700 தபால் பைகள் தீயினுல் அழிக்கப்பட்டனவென்றும் சில பைகளே மீட்க முடிந்தது என்றும் தெரிகிறது. மெயில் சார்ட்டர் அதிர்ஷ்டவசமாக சொற்ப காயங்களோடு உயிர்தப்பினுர். தீப்பற்றிய காரணம் தெரியவில்லை. போலீசார் புலன் விசாரித்து வருகின்றனர்.

——

### 15 லட்சம்!

சிறுவர் சிறுமியர் எல்லாரும் கட்டாயம் படித்தே தீரவேண்டும் என்று எகிப்து கல்வியிலாகா அதிகாரிகள் வற்புறுத்துகிறுர்கள். அதற்காக ஒரு திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. அடுத்த ஜனவரி முதல் அத்திட்டம் நடைமுறைக்கு வரும். புதிதாக 1300 பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப்படும். அதனுல் 15 லட்சம் சிறுவர் சிறுமியர்கல்வி பெறுவர்




சாஸ்திரோக்தமான பாதுகாப்பும் செலவுக் குறைவும்.

தேவையில்லாத ரோமங்களை சுலபமாகவும் எரிச்சல் இல்லாமலும் வாசனையுடனும் சுத்தமாகவும் போக்கி சருமத்திற்கு மிருதுத்தன்மை ஏற்படுத்துவதால் W. RIHR

ரோமசம்ஹாரி பவுடருக்கு அதிகப் பெருமை ஏற்பட்டிருக்கிறது

W. Rihr ரோமசம்ஹாரி பவுடரை நீங்கள் இன்றே உபயோகிக்க வேண்டும்.

உங்களூர் மருந்து வியாபாரிகளிடம் கிடைக்கும்.

புட்டி 1க்கு விலை ரூ. 1-0-0. தபால் சார்ஜ் பிரத்யேகம்.



LAXMIDAS DAHYABHAI & Co.,
Chemists & Druggists,
6, Princess Street, BOMBAY.

# பேபி கார் இந்த டயர்களினால் ஏராளமான மைல் விகிதத்தை அடைந்திருக்கிறது.




**இந்த கூர்மையான டிரெட் என்னவெனில்**

எல்லாவிதமான ரோடுகளில் 37,000 மைல்கள் ஓடின பிறகும்கூட டிரெட் கெடாமல் இருக்கிறது. ஒவ்வொரு "G 3" குட்ஈயர் டயரில் சிக்கனம், பத்திரத்தன்மைப்போன்ற குணங்கள் அமைந்திருக்கின்றன. நீங்கள் கொடுக்கும் பணத்தின் மதிப்பிற்கு அவைகள் உத்திரவாதமளிக்கின்றன.

## இந்த கடிதத்தைப் படியுங்கள்

30, எம்பிரஸ் ரோடு, லாகூர்.
ஜூலை 20, 1936.

தி குட்ஈயர் டயர் ரப்பர் கம்பெனி,
தி மால், லாகூர்.

அன்புடையீர்,

2½ வருஷங்களுக்கு முன்பு என்னுடைய பேபி ஆஸ்டின் காருக்கு 3.50—19 நிம்பருள்ள தங்கள் டயரில் ஒரு செட் வாங்கிப் பொருத்தினேன். அவைகள் பாக்கா, காச்சா ரோடுகளில் 37,000 மைல்கள் வரை ஓடியும் இன்னும் நல்ல நிலைமையில் இருக்கிறது. இப்பொழுதுங்கூட இன்னும் அதிகமான மைல் விகிதத்தை அளிக்குமென்று நம்புகிறேன். இதா டயர்களை உபயோகித்த முந்தின அனுபவத்தைக்கொண்டு குட்ஈயர் டயர்தான் சிறந்தது என்று உறுதியாய் கூறுகிறேன்.

தங்களன்புள்ள,
டீக்கா ஜாக்டார் சிங், லாண்டு லார்டு,
புரோவின்ஷியல் டர்பாரி.

அதிகமான மைல் விகிதத்திற்கும் பத்திரத்தன்மைக்கும் குட்ஈயரைப்பொருத்துங்கள்.

## *For more Safety mileage-fit*

# GOODYEAR

---

# மின்சார ரசம்

மனிதர் தலை முதல் கால் வரை வரும் சகல வியாதிகளுக்கும் தேவாமிர்தம் போன்றது.

ஒவ்வொரு குடும்பத்திற்கும் டாக்டரைப்போல் உதவக்கூடியது.

ஒரே முறை பரீக்ஷியுங்கள். புட்டி 1-க்கு ரூ. 2 தபால் சார்ஜ் வேறு.

விலாசம்:— மின்சார ரசம் கம்பெனி லிமிடெட், சேலம்.

---

## சொர்னவல்லி.

இது ஒரு அற்புதமான நாவல். நாட்டுக்கோட்டையார் சமூகத்தின் பழக்க வழக்கங்களைச் சீர்திருத்தவேண்டிய முறையில் வெகு ரசமாக எழுதப்பட்டிருக்கிறது.

விலை ரூபா ஒன்று.

மானேஜர்,
குமரன், காரைக்குடி.

Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd, at the Kumaran Power Press, Karaikudi (S. INDIA.)

